# அருங்கலை விளக்கம்

With the best compliments

[illegible]

இஃது

ஆநந்தாச்சிரமத்து சிவத்தியாநாநந்தனும்

ஸெண்ட் அன்டனிஸ் ஸெகண்டரி ஸ்கூல்

உபாத்தியாயருமாகிய

ம. வெ. சிவசுப்பிரமணிய ஐயர்

இயற்றியது



சென்னை :

காக்ஸ்டன் அச்சுயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது

விலை அணா 6] [தபாற்கூலி பிரத்தியேகம்

....."

## OPINION ON THE BOOK

M. R. Ry. S. Anavaratavinayakam Pillay Avl., M.A., L.T., Reader of The Madras University, writes: —"I have read portions of Mr. Sivasubrahmanya Aiyer's Arungalaivilakkam (அருங்கலை விளக்கம்) in manuscript. In the introductory pages he has compared the new system of education with the old and the main work is a concise account of the various arts and sciences, many of which were unknown to Tamil students until recently. He has done his work well even coining new expressions where necessary, and his powers of exposition are remarkable. The work is in verse, and throughout one could easily discern the author's command of the Tamil Vocabulary and his wide learning."

## OPINIONS ON DASĀNGAM

E. P. Walsh Esq., I. C. S., writes:—"I am sure the effort is meritorious and the idea an interesting one . ... ........ It is now proposed that some local compositions in honour of the coronation, shall be read to-morrow when the pandal is opened at 10 a. m. and if you like to recite your Tamil poem you will have an opportunity of doing so."

M. R. Ry. S. Lakshmana Aiyer Avl., B.A., L.T., of the Teachers' College, Saidapet, writes:—"Thanks many for your kindly sending me a copy of your Dasāngam and am glad to find that you have so successfully invoked your Muse on the auspicious occasion of His Majesty's Durbar."

## OPINIONS ON SANKALPA VERUMAI AND THE REVIEW OF MAHABHARATA

Dewan Bahadur T. Sadasiva Aiyer Avl., B.A., M.L., High Court Judge, Madras, writes:—"I thank you for the review (Diplomacy of Sri Krishna) in manuscript kindly sent to me and which I return to-day.........The Review is, as is usual with your productions, full of profound learning and acute remarks."

M. R. Ry. K. B. Ramanatha Aiyer Avl., M.A., B.L., L.T., writes:—"Many thanks for your booklets (The Vanity of Humar Wishes in Tamil and the Diplomacy of Sri Krishna in English) which I have looked at with a great deal of interest. I see that in translating Johnson's Vanity you have had to araphrase more or less and that was perhaps the only way of successful rendering from English into Tamil. You show onsiderable skill and mastery of the medium you employ......"

# PREFACE

It was long the author's intention to benefit the purely Dravidian Scholar with what the western world has in store for him. Synchronically the same idea seems to have struck his learned friend, M. R. Ry. T. Kanakasundaram Pillay Avl., B. A., who, in one of his letters, asked him to write "some odes describing the various departments of learning and the facilities afforded for such studies in a properly equipped college, interspersed with reflections, advice, exhortations, etc." This poem is the outcome of his letter wherein he wanted the author to write the work in a simple style and metre that it may be used as a text-book by the school final candidates. Since the author intends that this book must be studied advantageously even by the Higher Elementary Grade Teachers to be equipped well for their arduous task as teachers, he has attempted to write it in as simple a style as possible.

To the best of his knowledge, this work is the first of its kind. This is intended to supply the want of a book in the Tamil language describing modern Arts and Sciences: but it has no pretence to perfection with respect to matter or form of presentment. He has purposely omitted the Bibliography that helped him in the composition of this work, as it would be of no practical use to the class of readers for which this book is intended His thanks are due to the many authors who supplied the material for this work.

Suggestions for making the book more useful, will be thankfully received by the author.

ANANDASRAMA,
COONOOR,
*1st November 1914.*

SIVADHYANANANDA.

# CONTENTS

# பொருளடக்கம்

---

## CHAPTER I

## On Ancient Education

## பழைமைதோற்றிய வத்தியாயம்

## CHAPTER II

## On Elementary Education
## புதுமை கிளத்திய அத்தியாயம்



## CHAPTER III

## On Higher Education
## உயர்தரக் கல்வி யுரைத்த வத்தியாயம்

## CHAPTER IV

## On Technical Education

## புறனடை யுரைத்த வத்தியாயம்

---

# Exposition of Arts and Sciences

## அருங்கலை விளக்கம்

கடவுள் வணக்கம்

ஒருமதமுஞ் சாராதெச் சமயத்துந்
தலைப்பொருளா யோங்கி யென்றுங்,
குருமொழியின் மவுனிகளாய்ச் சமாசத்தை
வாய்ந்துமனக் கோட்டந்தீர்த்த,
பெரியவர்த மகத்தினைத்த மருட்டுறையாக்
கொண்டுறைந்து பேசு மன்னர்க்,
கரியபொரு ளளித்தவரை மேலாக்கி
வாழ்விக்கு மருளே போற்றி.

நூல்

1\. பழைமை தோற்றிய வத்தியாயம்

## Chapter I. On Ancient Education

கல்விநலங் காணவோர் நண்பனை யுடன்கொளல்.

Taking a friend.

1\. என்னினு னிழுது போலு மெழின்மலர் மணமே போலு
மொள்ளிய சிறப்பு வாய்ந்த நண்பநா முவப்பிற் சீர்சான்
றெள்ளரும் வனப்புச் சார்ந்த விந்நகர்க் கலாசா லைக்க
ணுள்ளவிர் கல்விச் சால்பைக் கணித்தறிந் துரைப்போம்வாராய்

## On Pial - Schools.

9 கவிகள் பழைய தமிழ்ப்பள்ளிக்கூட வியல்பை விளக்குவன.

2. நெடுங்கணக் காதியாக நிகண்டுநுந் திவாகரத்தோ
டிடும்பைநோய் தோற்றப் பேறற் பாழ்ந்துணி யரைக்கசைத்துப்
படும் லக்க நெல்லிலக்கம் பகர்குழி மாற்று மற்றுந்
திடம்பெறு சதுரவாயுஞ் சிறந்தலீ லாவதியும்.

3. புலவருக் கருமருந்தாம் புலமைசா லேடுதந்தோ
டுலவுறும் விவேகசிந்தா மணிகுற ளோடுவெண்பா
நிலவிய தொகைநூல் பல்ல நிறைந்த கீழ்க்கணக்கு முற்றுங்
குலவிய சுவடி நீட்டிக் கோத்துத் தூக்கதனின் மாட்டி.

4. கூட்டமதாகச் சென்று குறுகுமு னேத்தா ஜென்றுந்
தாட்டிகன் முறையே லக்கத் தப்படித் தம்மிடத்திற்
போட்டுள தாலக்கீற்றிற் றகைபெறப் பொருந்தா முன்னர்க்
கூட்டிய கையாலையர்க் குகந்தநற் றண்டங் கூட்டி.

5. பித்திகை நிறைக்கச் சட்டம் பிள்ளையு மேடுதாங்கி
யுத்தியி னோலை கைக்கொண் டாணியினெழுதி மற்றோ
ரொத்தவை வரையப் பார்ப்ப தோடுகீழ் வகுப்புக் கற்கு
முத்தமச் சிறுவர் பாட மொழுங்குறக் கேட்டு மேலும்,

6. நவமுறு பாடஞ் சாற்றி நல்லனவெண் பெருக்கித்
தவறிலை யாசான் சாற்றுங் குறிப்பினைத் தள்ளா தேற்றி
யவமெனப் பொழுது செல்லா தாற்றித் தம்முறையிற் சென்று
பவமறு நூல்கள் கூறிப் பாப்பல வினிப்பக் கேட்டே,

7. ஆதவ னுச்சி நண்ணு மமையத்தினில்ல மீண்டே
யோதன மருந்தி யொல்லை யொவ்வொரு சிறுவனுகை
வேதனங் கொண்டெறும்பு விழைந்துசெல் சூரியென்னச்
சாதனத் தூக்கைத் தோளிற் சார்த்திமீட் டமர்ந்தபின்னர்,

8. எத்திறத் தாசான் கற்க வியைத்தன ரத்திறத்துப்
புத்தகங் கற்றுப் பின்னர் வாய்பாடு பொருத்தயாரு
மெத்துற நின்று சத்த மேகமும் பொழிந்த தென்ன
வொத்ததம் முறையிற் கூறி யோய்ந்தவா னென்னவோய்ந்து

9. மடத்தினை விளக்கி மற்றை நாள்பணிக்கான வாற்றி
விடத்தினை யொப்ப நோக்கி வெருட்டுமோசாற் குவந்த
நடத்தினை நடித்துத் தீர்த்து நாட்டகம் புகுந்து கற்ற
திடத்துறு பொருளை யில்லஞ் செறிந்தபின் விளக்கின் பக்கல்,

10. பன்முறை சிந்தித் தோங்கிப் பளகறப் பொருளை முற்று
மென்முறை தோன்று முன்ன ரெழில்பெறத் தம்ம வாக்கிச்
சொன்முறை நலக்க வோதிச் சுருதிவாய்ப் பாடம் போற்று
நன்முறை மாணார்க் கண்ட நண்பநா முணர்வோ மிற்றை.

11. தொன்முறை பழகி வந்த நமக்கெலாம் பழைமை தூய
நன்முறை யாகத் தோற்று நன்மதி யகலா தேனு
முன்முறை தம்மின் மேலா முறையுறப் புகட்டு ஞாலப்
புன்முறை யொழிக்குங் கல்விப் புதுமுறைச் சாலை நோக்காய்.

12. நோக்குமுன் பழைமை போற்றி நுவன்று நூதனமுறைக்க
ணாக்கிய வெறுப்பைத்தோற்றி யருவருத் தியம்புகின்ற
மேக்கிலாக் குணத்தை வீட்டி மினிர்நடு நிலையினிற்குந்
தூக்கினிற் றுலாவென்னத் துகளற வாய்குவாயே.

### 3 கவிகள் தமிழ்ப்பள்ளிக் கூடங்களின் குறைவை யுணர்த்தும்.

### The drawbacks of Pial - Schools

13. தக்கன பாகுபாடு தவிர்த்து வெள்ளாட்டை யொத்து
மிக்கன நூலை முற்று மொழுங்கற விழுங்கிப் பின்னர்ச்
சிக்கறப் பகுக்கும் வன்மை சிறிதுமே யின்றிச் சிந்தை
மிக்குறு நினைவுப் பண்பே மிகுக்குமக் கல்வி கற்று,

14. பள்ளியிற் கணக்குப் புள்ளிக் கியைவுறும் பான்மை யின்றாற்
றள்ளுவோ மதனை யென்று தவிர்த்துப் பின்வேறு கொண்டு
மெள்ளவே யெழுதுவோன் கையியைந்த வேட்டினைக் கெடுத்தான்
பள்ளுறப் படித்தான் பாட்டை யிழுக்கினானெனப் பகர்ந்தும்,

15. பாமரர்கூட வொவ்வாப் பழங்கணக் கெல்லாங் குற்றந்
தாமுறப் பொதிந்த வேனுந் தள்ளருஞ் சீரவென்று

நாமுற வுரைத்து நாவி னவையினை மிகுக்கா தான்ற
தோமறு முணர்வி னிற்றைத் துகளறு முறையைத் தேருய்.

16. காய்தலோ டுவத்தனீக்கிக் கசடற வாய்தல் ஞான
மேய் தரு மொருவர்க்கன்றி மற்றவர்க் கியையா நீயு
மாய்வுறு மச்சால்பெய்த வெண்ணிடின் மனத்தணைந்த
சாய்வுறு கோட்ட முற்றுந் தவிர்த்தெனைத் தொடர்கவின்றே.

4 கவிகள் புராதன மடங்களி னேற்றங் கூறுவன.

The excellences of old mutts.

17. "அருமையிற் கிடைப்பி னன்றி யொருபொரு ளருமை யார்க்குந்
தெரிவுறும் வழக்கே யில்லை சீரியோய் புகலக் கேட்டி
குருமகன் றன்னை முன்னுட் குறுகிப் போய்க் கல்வி கற்க
விருமையிற் சென்ற காத மெதத்னை யெனத் தேர்வாயே ?

18. "மலையெனத் துளங்கா வாசான் வயங்குவதியாண்டையென்றே
யலைபடு துரும்பினேகி யரும் பெறற் கல்விகற்று
நிலைபெறத் தம்பே ரன்றி நிமிர் குலப் பேரு மாசான்
தலைபெறு சீர்த்தி கூடத் தம்மவாறியக் காட்டி,

19. "நாட்டினிற் புலவரே யென்றறைதர வுலாநடந்து
நாட்டிய கல்வியாளர் பலரையு நாத்திறத்தி
னீட்டிய வறிவின் வன்மை யியையினின் வாட்டி வென்று
கூட்டிய குரு வுவப்பக் கூடிய பொன்னை யீந்து,

20. "புகழொடு பொருளும் பெற்றுப் புலவ ரேவலனே மற்று
மிகழொணுப் பாரதிப் பாரியை கவிராய னென்னத்
துகளறு பட்டங் கொண்ட தூயவர் தன்மை யேகி
நகுதர நிற்கு மிற்றைக் கல்வியோ நலத்த" தென்றே,

21. இழிவன கூறிப் பெற்ற நாத்தடிப் பேற்றிப் பாரிற்
பழி சுமந் தாற்றும் புன்மை பரித்திடப் பரிந்த நண்ப
கெழுதகை யுண்மை வாய்ந்த கீர்த்தி சால் கல்லூரிக்க
ணுழுதகை நாவாருள்ளக் கிளர்ச் சியிலுரைப்ப கேளாய்.

பின்னும் 3 கவிகள் பழைய பள்ளிக் கூடங்களின் சிறப்பைத் தேற்றும்.

Some more excellences of the old mutts.

22. 'ஒவ்வொரு கலைக்குந் தத்தமிறுதிகா றுழைக்குஞ் செவ்வி
செவ்வியினை மைந்த மாந்தர் தவப்பலர் செறிந்தார் முன்னை
னிவ்விய லின்று காணோ மென்னகா' ணிப்படிப் பென்
றெவ்வுறு மொழிகளாடி யுளத்தினைக் கோட்டறீதே,

23. 'நூற்களினமைந்த கல்வி நுணுகியே யோதலன்றி
மேற்கண ஞானங்கூட மிறவெழுத் தமைக்க வாசா
னேற்றனர் சிறந்தாரிந் தவினை யெலா மொழிந்த; கூற்றை
மாற்று நன்னடைபயிற்றுங் கல்வியே மற்றைவீணே,

24. 'உலக நூலோதுங் கல்வி யுண்மையிற் கொள்ளொணுதாற்
பளகறப் படிக்கும் வேத மாணவர் பகரவுண்டோ
விலகுறு மிற்றைக் கல்வி வெறுமைய' தென்னேலன்ப
வுலகினை யறியாறுண்மை யுணர்ந்தவனே கானன்றே,

தற்காலக் கல்வி சிறப்பு.

Characteristics of Modern Education.

25. பூதல வமைப்புமாண்டு பொதிவுறு பொருளும் வாழ்வுந்
தீதறுமாந் தர்ப் பண்புஞ் செய்கையு மவர்வழக்குங்
கோதற வுணர்ந்தார்க்கன்றிக் கோட்டமின் மனத்துத்தீமை
காதிய தன்மை யோங்கி யிறைக்குணங் கதுவாகன்றே.

26. சடவுயிர்த் தத்துவங்கள் சழக்கற வுணராதார்க்குந்
திடமுற வெண்ணுந் தர்க்கத்திறமையை யியையாதார்க்கு
நடநவில்பொது நாதன்சீர் நவிலுதன் முடியாபின்னு
முடறனிலமையுங் கூற்றையோர்தலுந் தகுதியாமே ?

27. எம்முனோரின்ன செய்தாரக்குடிப் பிறந்தோமியாமு
மும்முனோர் நாகரீகமுற்றிலர் நேற்று வாழ்க்கை
செம்மினீ ரெம்முனிற்றல் சிறப்பன்று செல்வீரென்று
தம்மினும் பெரியார்மாட்டுத் தருக்குத றக்கதேயோ?

28. எட்டினிலுள்ள கல்வியுளத் தியைத்தியலவொண்ணுத்
தாட்டிகர் மூடரென்றே வடமொழி சாற்றன்மான
வீட்டியவறிவை யெய்தாரெழிற்குலத் துதித்தாவேனு
மேட்டிமை பெறுவரேகொல் கற்றமேல வரைப்போன்றே.

## 9 கவிகள் பழைய கலைகளிப்பொழுது காணுமையு மதற்குக் காரணமுங் கூறும்.

## The absence of Old Sciences and its reasons

29. கலைபல சிறுவி முன்னோர் கசடறவகுத்தாரேனு
நிலைபெற வவற்றிற்றேர்ந்தோர் நாமங்க ணிலவுமேனு
நலமுற நாவற் றீவி னடைபெறுமிக்காலத்தி
னிலையெனிற் சாற்றயாமும் யாதியாதியம்பற் பாற்றே.

30. பொறைசுமந் தமைந்து வேந்தர்க் கின்னமும் வேண்டும்போது
திறையளந்தளிக்குந் தேயமிதுவன்றித் தெழிக்கவுண்டோ
விறைவரை யுபசரிக்கு மெழின்முறை முக்காலிந்நாட்
டறைவரேற் கலைகுறைந்த காரண மரசாலென்றே,

31. கற்றறி மூடரன்றிக் கண்ணிய ரெவருஞ் செப்பார்
மற்று நம் பழைமை முற்ற மதிதனிற்றூக்கி யன்ன
நற்றுறை யூக்குவார்க்கு நல்லன பரிசளித்தும் [கோலே.
விற்றன பொருளைக் கொண்டும் விளங்கு மாங்கிலர் செங்

32. பலர் மனத்தினையு மோரா தொருதம கொள்கை பற்றப்
பலரையும் வாட்டிப் பண்பில் பழிபல வியற்றி நின்றார்
சிலர் பலர்துருக்க வேந்தர் செறிவொழிந்தன கலைகள்
குலைவுற வதனுலென்னி னதுவுநங் கொள்கை யன்றே.

33. பயன்விழையாது முன்னுட் பலகலைஞான மோர்ந்து
நயமுற விந்தியர் தம்மாட்டுறு நன் மகார்க்குப்
பயனுற வூட்டுஞ் செவ்வி பாராட்டினமையா வென்று
சயமுற மேனுட்டுள்ள வறிஞருஞ் சாற்று வாரே.

34. நம்மவர் பலரே சோம்புநாற்றித் தீத்தொழிலை யாற்றித்
தம்மவர் பெருமை முற்றுந் தாழ்த்தினர் காலப் பண்பாற்
செம்மனவமைவு நீத்துச் சிறுமதி கொண்டாரென்னி
னம்மவோவுண்மை முற்று மறைந்தது வாகுமன்றே.

35. விளக்கற மகலப்பாவ விருண்மலிந் துறுத னோரத்
துளக்குறப் பாவஞ் சேரச் சுத்தன் மார்க்கச்சீர் கெட்
டளப்பருங் கலையுமன்ன வறியு மேதையு மகன்று
கிளக்கருஞ் சாதி யேற்றக் கீழ்மையுங் கூடிற்றன்றே.

36 தலைமை சாதியு கெட்டுத் தட்டழிந் தேசமெல்லாமு
நிலையழிந் தந்தில் ராமபாணத்தி னொடு வாயுற்றுக்
குலைவுறுங் காலத்தார்ந்த குறுந்தெருப் பாடசாலைத்
தலைமையின் பெருமை சாற்ற லெவ்வனஞ் சமைந்த தன்ப ?

37. உள்ளன கொடுத் தொழிந்த வெறும் பெருங்காயப் பாண்டந்
தள்ளரு நாற்றமன்றி மற்றொன்றுந் தராது கண்டா
யெள்ளரும் பெருமை சான்ற சீரியரிருந்த கீற்றிற்
கொள்ளருஞ் சிற்றுணர்ச் சிக்குருக்களு மமர்ந்தளித்தார்.

## 27 கவிகள் பழமையிற் சிறந்த புலவர் சிலரின் பெயருங் குணமுங் கூறும்.

## The names of some ancicut savants of Tamil Literature.

38. வராகமிகிர ரன்ன கணி யிவண் வழங்க வுண்டோ
தராதலத்துரைக்கக் கம்பன் றரச்சுவைக் கவிகளுண்டோ
குராபொறுத்துயர்ந்த கேள்விக் குரவரு மொழிந்துமாண்டார்
நிராமயநண்பநீயு நெறியறியா துரைத்தாய்.

39. வேதமே யென்றுபாரிற் றமிழ்வலோர் வியக்க நீதி
யோதியகுன்று கண்ட வுயர்மொழிப்புலவ ரீண்டை
வாதுறுர்பலருங் கொள்ள வயங்கு நாலடிபகர்ந்தோ
ரேதமில் பெருமைச் சிந்தாமணி நரிவிருத்த மீந்தோன்,

40. களவழி நின்றுபாடிக் கருசலனின்று மீட்கு
முளவலிப் பொய்கைபோலு முற்ற நல்லரசருக்குத்
தெளிவுறப் பொருளுணர்த்துஞ் சீத்தலையாரைப்போலு
மொளியுளதோழன் மாண்டவுறுதி கேட்டுயிரை நீத்தே,

41. ஒண்புகழ் நிறுவிநின்ற வொருவனு மாந்தைபோலு
மண்டனிற் சாதியேற்றமயக்கினை யொழித்த நாவா
னெண்டருங் கபிலன்போலு மிறைவர்க்கே குற்றமேற்றுஞ்
சண்டனுங் கீரன்போலுஞ் சதுரரு மிற்கமற்றும்,

42. பரணனே யௌவை மோசிபதுமனே காரிக்கண்ண
னரிவெரூஉத்தலை யன்றும்பி நன்கணிமோசி கீரன்
பரதநூல் வல்லகோநற் பாரதவெண்பாத் தேவன்
சரதமாக்கீர்த்தி சார்ந்த சங்கநூற்புலவர் நிற்க;

43. நச்சினார்க்கினியர் பேராசாரடியார்க்கு நல்லா
ரச்சினுக்கமைதி கூறுமருமிளம் பூன்றரோடு
மச்சுவத்தழகர்சேனா வரையரென்றறையு மின்ன
மெச்சுரைகூறு மேலோர் பலவரு நிற்கமேலும்;

44. அகத்தியப் பின்னமைந்த வரியதொல் காப்பியத்தை
யகத்தினி னமைத்து நன்னர்ப் பாட்டிய லமையக்கூட்டி
யுகக்கவைந் திலக்கணத்தை யுரைத்தவ னேமிநாதம்
வகுத்தவன் வீரசோழங்காரிகை நன்னூல் வாய்த்தோர்.

45. வடமொழிப்போக் குணர்த்தவாய்ந் துபயோகமாக
வடைவுறு பிரயோகத்தாமறிவு நூலறைந்தவாசான்
றடையறப்பிறநூற் றொன்னூலிலக் கணமெழுதுமையர்
நடைபெறவணியே நாட்டி நவின்றவ ரிருவரோடும்.

46. இளைஞருமதியிலோரு மெளிதினி னுணர்வான்செய்த
பழையநூலாசான் வெள்ளைப்பாவினிற் சிறந்தோனன்றி
யுளைவுறுமனத்தோ டன்னுனுயர் கவிவிதக்குங் கூத்தன்
றளைதரச் சந்தம் பாடுந்தமிழ்விலி வண்ணத்தாக்கோன்.

47. கர்க்கசச் சொல்லாமென்று ருகுவம்சங்கடிதிற் கூறித்
தர்க்கமில் பீடுபெற்றுத் தயங்கு கேசரியெழுத்து
வர்க்கத்தி லகராதிப்பல்பெயர் கதைவழங்கு நூலோர்
சொர்க்கத்தோர் பெயர்முன்னாகச்சொல்லுறு நிகண்டுதந்தோர்

48. காலமுமிடனுமற்றுங் கிளத்தியமுறைகண் முற்றுஞ்
சாலவே யறுபான்மூவர் சரித்திரநவின்ற நாவார்
நூலென வொருநூல்சாற்று நுண்ணறிவில்லாரேனும்
பாலென வொழுகும்பத்தியுரைப்பரஞ்சோதியோடே;

49. மதத்தமை தத்துவங்கண் மதிக் கருமுவமையாகச்
சதத்தின்மேற் கூறவல்ல தணிகைநூற் கச்சியப்பன்

கதித்த நற்பொருள் சிறக்கக் காஞ்சிநூனவின்றமேலோன்
விதித்த சொற்சந்தி முற்றவுவமையா விளம்புஞ்சைவன்,

**50.** அன்னவனடி பின்பற்றி யலகிலபாடிக் கம்பன்
பின்னருமுதித்தா னென்னப் பிறங்குமீனாட்சிவள்ள
றன்னுறு மாணார்க்கென்று தகைபெறவெழுதிவைத்த
மின்னுறு முத்துவீரவைந்தொகை மொழிந்தமேலோன்,

**51.** விந்துதத்துவத்தின்மீது விளங்கிநந்தம் மன்பர்க்கென்றும்
விந்துதத்துவத்தி னுண்மைவிளக்கியைம் பொறியடைத்து
நந்திய கடவுள் காதை நவின்றரும் பொருளமைத்துத்
தந்தவோர் புலவனின்னர் தகைமையை விளம்பலாமோ ?

**52.** சைவமே சமயமென்றோன் சாற்றுஞ்சொல் சுருங்கினன்றிந்
தைவிக மறிபொருளெதன் றுரைத்தவன்கூட லம்மைக்
கைவருப ருவம்பாடி யழைத்தவன் கண்டுபோன்ற
நைவரு சொல்லாற் கூவினைந் தவன்முன்னோர் நிற்க,

**53.** நெட்டிலை யாம்பைக்காயை நிமிர்முளைக்குவமைகூறி
வட்டவான்றிரிகைபோற்று மலிசுவைங் கல்லூடத்தா
னெட்டியமகா கைமன்னர் சம்பந்தருறவுகாட்டி
முட்டலர்முரணறுத்து முயக்குசேர்த்தண்டபாணி,

**54.** மந்திரமுறை யுரைக்கபுலவரும், யந்திரக்கைத்
தந்திரமுறையிற்செய்து சான்றமேதசிகருநோயைச்
சந்ததநீக்கு மார்க்கஞ் சாற்றும்வா கடர்கடாமு
மந்தமாசசோதிடக்கை யலங்காரமாக்கினோரும்,

**55.** அருந்தமிழ்க்கடலையாய்ந்தே யுபரிடத்தருமை யோர்ந்து
பொருந்திய வடநூறன்னைப் புரையறவாய்ந்ததன்றித்
திருந்தியவாங்கிலத்துஞ் சிறந்துபொற்கழக நாட்டிக்
குருந்தடிப்பிரான் சீர்கோற்றுங் கூடமாவமை நாவல்லோன்,

**56.** பட்சண யாத்திரைக்காம் ரகசியத்தோட் கோப்புற்றுத்
தட்சண மதத்திற்சான்ற குருக்களாத் தயங்குமத்தி
யட்சருங் குருவாக்கொள்ள வருமைநூறெரித்தமேலோன்
பட்சபாதங்களின்றிச் சமரச விசைபகர்ந்தோன்,

64. அறுமுகற் றுதிப்போன்யானுமடாது நீயென்மாட்டெய்த
றறுகணுசெல்வாய் நிற்பிற் சத்தியங்கருவம் போக்கிக்
கறுவுவென் காலபோவாயெனக் கவி†கழறுவோனுந்
திருநயம் வேம்பத்தூர்க் கட்டிகழ்பலபுலவர்தாமும்,

5. கவிகள் தற்காலத் தமிழ்ப்பள்ளிக்கூட
நிலைமையுணர்த்தும்.

## The present state of the Pial-Schools.

65. இப்பெருங்குரவர்யாரு மிறந்தனர் சிங்கநின்ற
நப்பெருந்தவிசிஞாய்பு நலக்கவீற்றிருந்ததென்னச்
செப்பரும் வாவுக்காசு சிவசிவசனியனெண்ணை
வெப்புறு மெரிதுரும்பு விதிர்க்குங்கோலாட்டக்கூலி,

66. அன்னபல் வருவாய்வேண்டி யந்தமேனோர்கண்ணிலானுக்
குன்னரு நெறியைக்காட்ட வுவந்து வந்துறுதனேர
மன்னிய கல்வியின்றி மதிக்கலரி கழவண்டி
துன்னுவானுற்றுத்தோலைப் போர்த்து நற்குரவரானார்.

† முதுகுளத்தூர் வித்வான்
அட்டாவதானம் வேலாயுதக்கவிராயர் பாடியது.

கனகவரையுடையவெழு கடலலைசுவறநெடிய
சனகமுக டதிரவிண்மீன்
கள்பலபலென்றுதிர வட்டாவதானமொரு
கடிகைக்கு ளாக்ரமித்தே
யினிதாநடத்து வேலாயுதக் கவிராய
னிடியேதனுப்பு நிருப
மெருமைக்கடா வாகனங்கொண்ட தென்றிசை
யெமப்பய லெதிர்ந்துகாண்க
திணையமுதருந்து குறவள்ளி கணவன்றுணைச்
சேவடிக்கடிமை பூண்டு
சித்ரகவிபாடவருள் பெற்றதுரையெனவெமைத்
தெரியாயொடா வடா நீ
யுனது கருவத்தை நமதிடமோ செலுத்துவ
துனக்கு வருமோசமப்பா
வோடியுன்னூர் புகுந்திடுதயவு வைப்போம்
பினுன்னுயிர் பிழைத்திடுவையே.

67. பதம்பொழிப் பகலஞ்சுட்டுப் பருப் பொருடெரிய வூட்டும்
விதமறியாதுழன்றும் வேண்டுவெபட்டம் பூண்டு
மதந்தருமனத்தாகி மறுகுதோறுறுவாரேற்றம்
விதந்து நீயிசைக்கவெண்ணல் பெருநகை விளைக்குமன்றே.

68. யமுனையர் புரையுஞ் சீடன்வடமொழி தமிழில்யாவுங்
கமையொடுமறித் துக்கேர்ந்த கண்ணியன் குருவினேற்ற
மிமையினிற் காக்குமேலோனியைக்கு மாசிரியர் சாற்ற
லமைவுறுமொனினுமோர் சொற்றமிழ்வலோருக நின்று,

69. தக்கபோராசானென்னச் சார்ந்தரசவிக்கும் பட்ட
மிக்க சீர்ச்சாமிநாதன் புரையுமோர் மேன்மைசட
னிக்கனமொழியானீந்துக் கிளருமாசிரியருண்டோ
மிக்க தம்வயிறு வார்க்கமெற் கொண்டோராசாராமே ?

14 கவிகள் தற்காலத் தமிழ்ப் புலவர் சிலரைக் காட்டும்.

Some Modern Savants Of Tamil Literature.

வேறு

70. ஞானமிருந்துஞ் சிவஞானற்றரக் துவ நாட்டுபவ
ரானப்பெருமைத் திருவாதவூரர் கலவுரை
பானட்டு ரையிற்பகர் வாருமிங்ஙன் பயிலுவாராற்
றேனரு நண்பதெரியேன லனிவைதேறுகவே.

71. தொல்காப்பியப் பாயிரவுரை கூறுந்துறையினிலே
யொல்காப்புகழ்ப் பாடியக்காரர் கூற்றினளேறறுத்திங்
கல்காச்சுவைப் பவணர்தி தவறியவாறுரைக்கும்
பல்பாமிறைக் கவிபாடும் கவியும் பரந்துளனே.

72. சங்கம் புதுக்கிப்பரிலுஞ்சிறுருக் கடிசில் சமைத்
தங்கம் பெறப்பலவோட்டுக் கவிகளையாதரித்துப்
பங்கங்கெடப்புரிசெல்வனு நின்று பயின்றனனற்
றுங்கம் பெறப்பலவொப்புற கழகந்தொடங்கியதே.

4 கவிகள் தமிழ்ப்புலவரது சலைக்குறைவை யுணர்த்தும்.

On the one - sided knowledge of the pandits.

73. இன்னார்முயற்சியு மோர்கலைக் கண்ணேயியைந்ததெனத்
துன்னார்பகர்வர் துகளறநாடினது துணிபா

மென்யார்சொலினும் பூரணக்கல்வியியைந்தவர்க
ளென்றாலரதை யார்ந்தறி நண்பவகத்தினிமே.

74. கலையின் மகளிறும் கற்கு முறையைக்கழறுவாராற்
றலைசாருலகினிற்றத்துவநூலுஞ் சரித்திரமு
மலைகடற்பூமியறிவும் ரசாயனவாக்கமு மெய்ந்
நிலைபெறுதத்துவக் கூற்றுணர்வும்மிலா ரேமியரோ.

75. ஐந்தேமுதற் பொருண்மற்றும் பலவென் றறைதலொரு
மைந்தே பெறப்பலர்கண் ணுற மாட்டினு நாமதியோ
நொந்தேயுரைத்தனர் நம்மவரோற்ற நுவலுதற்குத்
தந்தேயுரைத்த வளவை காணூத் தபத்தினென்றே,

76. தங்குறை காட்டறவறென வெண்ணுந்தசையர்சிலர்
திங்களுங்கோளென் றிழுக்குரையாடிக் கோளரிலை
சிங்கறத்தேறார் குழறுவரின்னர் செறிவொழித்து
மங்கலில் கல்வித்துறைமுறையூட்டு நன்மாண்புணரே.



## II. புதுமை கிளத்திய வத்தியாயம்

# On Elementary Education

நவீனக் கல்விமுறையை நோக்க வழைத்தல்

வேறு.

77. காலங்கழித்தோங் கசட்டுரையாடி யென்று
சாலக்கவலுஞ் சதுரவென் பின்னருற்றுக்
கோலத்தமர்ந்து விளங்கு நற்கூடமொன்றை
ஞாலத்தறிவோநடை விரைவெய்து வாயே.

78. [illegible]லத்தொளிர்கின்ற தூவிமாடத்தணைந்து
சாலத்தெளிந்தவர் தம்முறை கேட்குமுன்னர்ச்
சீலத்தமைந்த சிறுவர் நூலோதுபள்ளி
யேலத்தெரிகுவமேக் கறப்பின்னுருயே.

இருநாட் கல்வி யிருதிறத் தெனல்.

**2 Kinds of Education - Elementary and Higher**

**79.** இருநாட் படிப்பையிருதிறத் தாக்கினோர் தம்
பின்னேட் கலையயில் போதிவாளர் கூடந்
சின்னேட்படிப்பிற் சிறைகவுறுவோர் கள்கற்கும்
பன்னேட்பயிலாத பள்ளிக ளென்றிரண்டே.

**27** கவிகள் கீழ்த்தரப் படிப்பினியல் கூறுவன.

Elementary Education.

அடி வேறு.

**80.** உயர்தரப் படிப்புரைக்குமுன் கீட்டரக் கல்வி
நயந்தனைச் சிறிதறைகுவனண்பசீ சற்றும்
பயன்றரா மொழியெனப் பகர்ந்தொழிக்கல் பல்லுறுதி
யெய்ங்கு தன்மையை மனத்திலிரோருக மதித்தே.

**14.** கவிகள் போதிக்கப்படும் விடயந்தேற்றுவன.

Subjects taught in Elementary schools.

**81.** எண்ணெழுத்துடனியற்கை நூற்றத்துவமெல்லாம்
பண்ணுறப்பல பொருளையுங் காட்டிமுற்பகர்ந்தே
கண்ணுறக் கரும்பலகையிற் கணக்குறவரைந்திங்
கெண்ணுமிந்திய வாயிலாற் புகட்டுவரின்றே.

**82.** கோளவட்டமு மதனிற்கோள் செல்லுறுகதியுந்
தாலவட்டத்தினமைப் பொடுகண்டமும் பூவின்
கோளவட்டத்திலுயிர் பயிர்க்கூட்டமுங் காட்டி
நாளவட்டத்திற் படம்வரைந் தறைகுவர்நன்கே.

**83.** செடிப்புதல் மரவியற்கையைச் சேருறப்பகர்ந்து
கொடிப்பயிலுறுங்கொள் கொம்பின் றன்மையைக் குறித்து
மடிப்பில் பூதக்கண்ணுடி கொண்டவைமுறை மாட்டித்
தடிப்பினன்னவை யுணவுணுந் தன்மையுஞ்சாற்றி.

84. ஓரிரண்டுடன் பல்வருடப் பயிருணர்த்திச்
சீரின்முள்ளை பொகுட்டை சருச்சரைதெரிக்கு
மேரிற்பல்லைப் பாதபங்கிலையையு மேத்திப்
பாரிற்புனமுறுஞ் செடிமர வேர்களைப்பகுத்து

85. பொருட்டுணைத்தொடுகூட்டி நல்லறிவினைப்புகட்டி
யருட்டுறை பலவமர்ந்த சீர்நேர்கரையறைந்து
செருக்கிலாவராசனி மல்பதிகளைத் தெரித்துப்
பருந்தம்முலகினி லெலாஞ் சிறுருறப் பயிற்றி,

86. விருகத் ன்மையும் வேறுமை பயிலுறுமிடமும்
பெருகவன்னவாறுட லமைவுறுதியும்பேசி
விரியத் ந் மைமக்களுநகர நெறிவிளக்கும்
பிரியசெய்கையும வெறுப்பையும பிழையறத்தெரிப்பார்

87. பட்சி சாலமும பறவைக ளிலை யினைத் தேர்ந்து
குட்சி வார்தையை யொப்பது குறைவறக் கூறிப்
பட்சமாக மச்சங்களின பகுப்பினைப் பகர்ந்து
தட்சணா வற்றுள வழுவமைதியைச சாற்றி,

88 கண்டகன் சேவகனு ரினைக்காப்பவன் ...ல்
பிணக்கறப் பலஞாயமும் பேசதிகாரி
யிணக்கியோர் பகுப்பளிப்பவன் மாகணக்கனவன்
குணத்தர மிறைக்கா வமர்ந் தரசனி குழகன்.

89. மந்திரத்துற மதியவா செயு முறையைசகி
யந்தி லொவ்வொரு குடித்தொழிற் கடைமையை யறைந்து
சந்துநேர்பட்ச செல்லுவோர் தன்மையை விளம்பித்
தந்திரத்தா சியலுறு முறையினைச சாற்றி.

90. காடுகாவலர் கட்டடப் பார்வையர் மற்றுங்
கூடுபத்திரங் குறிப்பவர் கடிதங்கள் கொடுப்போர்
நாடுதந்திடு மிறைபெறு வோர்களுநாடித்
தேடு போதனு முறைசொலுந் தேசவர் முன்னு,

91. அயாதத்தினை யியக்குவோர் சேனையை யணியாப்
பயிறரப்பணி பண்பர் நீராவியி னுவாய்

செயிரறச செலுத்துந் துறைகாவ லருப்பு
வயிரியர் மதுச்சேவகர் நகர்வலம் வருவோர்.

92. இன்ன சாலை யமைத்து நாட்டிட் பகையிறுத்து
முன்ன மிவ்வகை யாண்டவர் மொழிவதற் கெவருந்
துன்னிரு ரலரென மொழித் திறந்திறஞ் சொல்லிப்
பன்னுமாணவ ரறிவினைப் பரப்பியே பயில்வார்.

93. ஓவியர் செயமுன் வராவுயிர்ப் பொருளுருவந்
தாவிலா வமமாணவர் தாரியஞ் சாய்ந்து
மேவுறுத்துவார் மாதிரி மண்கொடு விளைத்து
மோவறக்கணுற் கண்டவை சைசெய வுணர்வார்

8 கவிகள் கீழ்த்தரப் பள்ளிகளின நுபந்தங்களைக் கூறும்.

Auxilliaries of Elementary Schools.

வேறு.

94. என்றெழுந் தடங்குங் காறுமென்புகள் வளராவண்ணந்
தன்கரங் கால்கள் சூறையோடு வானவை தகைந்து
முன்னுறவமர்ந்து மிதக மொய்ம்பெலா மொழிய நாளோன்
றன்கரங் கதுவாப்பையுங் கூடழுன்ன ந தனவலி குறைந்து,

95. தடுக்கம ரிளைஞன் மானத்தம் வலிகெடா துறப்பு
மிடுக்கொடும்வளரப் பூன்றவுருவமும விளங்காக
மெடுக்குமிச சிறுவர் கூடத்திலைபகுறுங் கடிகளோடு
கொடுத்த மெய்யப்பியாசக் கருவிக டெடைவாராய்

வேறு.

96. முகத்துனீட்ட லெண்பெருக்குத லெடுத்தலு முலாப்
பகுத்தலாக்கலுங் கழித்தலும் பண்புறப்பழகி
யகத்ததும்மறிவநுபவத் தன்மையினையை
மிகுத்ததூக்கு முற்கருவிகள் விளங்குவ காணுப்

97. கடல்படுபவை கல்லினிற் றோன்றுவ சாலி
யடலுறப்படு மருத்தின் கருப்பொருளனைத்து
மிடைவனத்தினின் விளைபவை யன்றியெம்பாலைக்
கடமுதிப்ப வாங்கருகரு பொருளினைக் கணியாய்

98. காட்டுவாழ்க்கையி னுயிர்களி னேவியஞ்சுவரி
னேட்டமுற்றினு நாட்டியதன்றி மற்றுவற்றை
வேட்டையிற் பிடித்துள்ளுறை போக்கிப் பஞ்சடைத்துக்
கூட்டிவைத்துளார் குறித்தவற் றழகினைக் குறியாய்.

99. காட்சிசாலையுங் கருதரு மதியினை வளர்க்க
வாட்சியான தோட்டமு மினைப்பரும் பொருளடைவான்
சேட்சென் றுற்றவை சேர்த்தலுஞ் செப்பரிதைய
சாட்சி வேண்டிற் போதனை முறைச்சாலை நீ சாராய்.

100. தோட்டஞ் சுற்றக்கைந்நடை பயிருறிக லெங்க
வோட்டிப் பின்னிடை யிடைசிறு பாதையுமுனுற்றி
யேட்டுக்கல்வியிற் சொல்லுவ வநுபவத்தியைத்து
நாட்டும்பாத்தியு ளூற்றுகள் வளர்வகண் கூராய்.

101. இன்னநற் செடிக்கின்ன நல்லெரு வெனக்காட்டிப்
பின்னரன்னவை மாற்றிடிற் பிறங்குறும் பெட்பு
முன்னியோர்தர வுணர்த்தி மற்றுவை யுவையோங்கி
மன்னு மண்ணியல் பதனையும் வகுத்தனர் மதியாய்.

3 கவிகள் வித்தியாவிலாகா மேல்விசாரணைக்காரர் செயும்
பான்மை கூறும்.

## The work of the Supervisors.

102. மேல்விசாரணைக்காரரும் வருட நான்முறை சென்
றேல்வையிற் பலவூரினு மியைந்து நற்கூடச்
சால்புதேர்ந்து பின்பேசரு முறைகளைச் சாதித்
தாள்வர் கட்டட வமைதியுஞ் சுகமுறநோக்கி.

103. நோயுறு நெறிக்கானவை யமைவுடனு வல்வித்
தேயுந்தர்ப்பண மெனப்பலசீரினை யேய்த்துத்
தோயுமே லதிகாரிக்காங் கணக்கினைத் தோய்வித்
தாயுந்தம்மறி வுளத்தி னெவ்விடயமு மாய்வார்.

**104.** மன்னுநாட்டினின் மலிவுறு கைத்தொழின் மதித்துச்
சொன்ன நூதனமுறையிற் றுயவைசெயச் சொல்வித்
தென்ன பாக்கியஞ் செய்தனர் நஞ்சிறுரென்னத்
துன்னுந் தந்தைதாய் மொழிதாத் தோய்க்குவர் துணைவ.

2 கவிகள் இப்பாடசாலைகளிற் கற்ற மாணவர்

பெருமை கூறும்.

The effects of Elementary Education on boys.

**105.** இன்னமியாதியா திசைப்பரென் றியம்புதன் மிகையா
மின்ன கீட்டரச்சாலையிற் பழகுமிவ் விளைஞர்
மன்னு நாட்டியற் பூரணவறிவினின் மலிந்து
தன்ன மெய்திப்பி னன்னெறிமாந்தராத் தயங்கி,

**106.** அரசநேசமுஞ் சட்டத்திற் கடங்குறுமியலும்
விரசு பன்னெறிச் சேவகர் கடமையும் விளைவும்
பரிசிஞோர்ந்தய லம்பலை மதியினுற் பறித்துத்
தரையினற் குடிப் பண்புக்கோர் சுட்டெனத் தாழ்வார்.

Apology.

**107.** காலமுண்டெனி னின்னமுங் கழறலா மேன்மை
சாலவுற்றுளிர் |கலைகளைத்தரு மெழிற்கழக
நூலினுற் றுணர்ந்துன் னுளத்தெழுந்த பேரைய
மாலவெண்ணிணை யாதலி னகன்றவண் போதாய்.

**108.** போவதன் முனரோருரை புகலுவன் செவிசாய்த்
தோவறவுணருன துளத்த மைத்தென மதித்துத்
தாவறுங் கலைத்திற னெலாந் தரமுறச் சாற்ற
மேவு நுண்ணறி வில்லியென் வெளிற்றுரை தேராய்.

### 4 கவிகள் மேற்படிப்பின் கண்ணமைந்த பாடசாலைக ளின்ன வின்னவெனும்.

### Schools for Higher Education.

109. அக்கசாலைக ளமைந்தன சாற்றுமென் முறையே
மிக்க பள்ளிகண்மீக்கலை கழகங்கள் சிறப்ப
மொக்கவாகட நாட்டுறு சட்டங்க ளுணர்த்திச்
சிக்கறுத்திடுங் கூடங்களோவியந் தீட்டி.

110. * கண்ணுங் கைகளுமொத்துறக் கருவி கைபழக
வெண்ணுஞ் சித்திரசாலைகள் கைத்தொழி லியற்றுந்
திண்ணவா றெலாந் தெளிவிக்குங் கூடங்களுழவு
மண்ணின் யாவரு முணருவான் போதிக்கு மாடம்.

111. வனத்தமைந்த பாதபஞ்செடி யியற்கையு மவைதாம்
வனத்து நின்றளி பயனுமற்றவை தமைவளர்ப்பான்
றினத்துச் செய்ம்முறை யாதிய தெரிக்குங் கல்லூரி
மனத்தினோர்ந் திவைமுற்றுநீ மருவி முன்னோக்காய்.

112. பழைமை தோற்றிய வடமொழி பயிறரு மடங்கள்
விழைவின் வேண்டுவெமுறை யுறப்பு கட்டுவான் விழைந்த
வழுவிலா முறைப்போதனை சாலைகடேயம்
பழகுமொற்றர்கட் கருநெறி பழக்குவசிலவே.

---

## III. உயர்தரக் கல்வியுரைத்த வத்தியாயம்.

## On Higher Education.

### உயர்தரக்கல்வி நான்கு படித்தரமுடைத்தெனல்.

### 4 Grades of Learning.

வேறு.

113 இவ்விடத்தியன்று நிற்குமிது பினர்ப்பயிலுங் கல்வி
யொவ்வுறத் தேர்வா னூட்டு முயர்தரப் பள்ளியீதிற்
செவ்விதிற் றொடக்கமத்தி முடிவெனச் சேர்த்தாரேனு
மொவ்வுற நிபுணனுகு மோர்தரங் கூடவுண்டால்.

4 கவிகள் கட்டட வமைப்பையுங் கருவிகளமைப்பையுங் கூறுவன.

## Organisation.

114. புத்தகசாலை பின்னும் பொருந்திய வியற்கைமாற்றி
னித்தகை யாக்கங்கூடி யியல்வதே யென்னக்கண்டோர்
சித்தமுண் மருளச்சேர்த்த கருவிகள் சிறக்குங்கூட
முத்தமச சிறுவர்தேக வுறுதியை யடைவான் போற்றும்,

115. தண்டொடு பந்து மட்டை தயங்கிய வுறையுணித்த
மண்டிய தேயச்செய்தி யறிவிக்க மலிந்தகூடம்
பண்டை நாங்கற்ற முற்றும் பயனில வென்றுகாட்டக்
கொண்டபல் கருவி சூழ்ந்த கழகத்தின் முறையைத் தேர்வாம்.

116. ஒவ்வொரு மாணூற்குற்ற வுன்னதபீட மேசை
திவ்விய கருவிப்பேழை சிறந்தசோபான மார்க்க
மெவ்விடத்திருந்து மாசான் முகத்தினை யெளிதினோக்கிச்
செவ்விதினவர் தெரிக்கும் பொருளினைக் குறிப்பதோராய்.

117. கட்டட வடைவுங் கற்குமாணவர் தெளிவுங்காட்டி
முட்டுறு துடலைக்காக்க முயங்குசாளரத்துக்காலுந்
திட்டியிற் பலருங்காணத் தீட்டியபடமுமாசா
ஞெட்டியே யுவர்நடக்கு முத்தம வொழுங்கும் பேசாய்.

3 கவிகள் மாணவரது நல்லொழுக்கத்தை வியந்து கூறும்.

## Discipline.

118. ஒருவர்போற் பலரும்போற்று மொழுக்கமு முடையுஞ்சீரு
மொருவருமு வாத்தியார்க ளூற்றிலாவக் காலத்து
மருவுறு மவுனமன்றி வகுக்கரும் பணிவுமாற்றந்
தருபொழு துரைக்குந் தாழ்வுங் கவுரவத்தன்மை தானும்,

119. அடக்கமே யமரர்பாலுய்த் தறிவினை விளக்குமென்றுந்
தொடக்கத்துக் கற்கும் பான்மைசொன் மரியாதையென்று
மிடக்கரை யடக்கலான்றோ ரேத்திய முறையாமென்றுங்
கடக்கருமுறையிற் சான்றோர்கழறிய வொழுக்கந்தாமும்,

120. இவையன சிறியவான விடயத்து நயத்தைக் காட்டு
நவையறு செய்கைசிறக்க நாடருமவர்கள் கற்கு
சுவைபெறு நூலின் பாகுபாட்டினைச் சொல்லுகேன்கே
ளவையென் சிற்றுணர்ச்சிக் கூற்றினமைபவை யல்லதேராய்.

4 கவிகள் பாடப் பாகுபாட்டினைக் கூறும்.

Subjects taught.

121. ஆங்கிலங்கணி தம்பீச கணிதமும் பூவளக்க
வோங்கிய நூலு முக்கோணத்து றுப்பளவு முற்றத்
தேங்கிய வுவமைதேய்ந்த வடமொழி திராவிடத்தி
ஞங்கமை பகுப்பினை நால்வகை மொழிகளோடே.

122. இயற்கைநூ ல்ராசாயனத்தி னியன்றிடும் வீற்றுவீற்றுச்
செயற்கையை யுணர்த்து நூலுஞ்சிக்கறப்பூமிநூலு
முயற்கறை மதியு மற்றைக்கோ ணிலைமுயங்குமாறுங்
கயற்கணே வாட்டும் மார்பக்காளையர் செருவுஞ்சாற்றி,

123. தாவர நூலுஞ் சங்கமத் துயிர்ப்பிரிவு மன்ன
வோவறு மியற்கை புந்தி யுண்மையு முரைப்பரன்றிப்
பாவுறு கடவுட் பண்பை மதியினுற் பகுத்துக்கூறுந்
தாவரு நூலுஞ்சாற்றிச் சதிமன முயர்த்துவாரால்.

124. வாதமு மதனுண் மாந்தர்வழுவுறு நிலையுங்காட்டி
வாதமுன் னெண்ணு மூன்றும் வழங்குறு முடலின் கூற்றைப்
போதனமுறை யானூட்டிப் புகலுறுமேற்ற நம்மாற்
சாதனம் பண்ணல் கூராதாயினும் பகர்வேன் சற்றே.

30 கவிகள் பௌதிக சாத்திரவியல்.

Physical science.

11 கவிகள் பொதுவிதிகளைக் கூறுவன.

General Principles.

125. அணுத்திரளொன்றிப் பற்பல்வத்துக்களான கொள்கை
தணத்தனர் காந்தசக்தி தழுவியரேணு தம்மாற்

பிணக்கறப் பொருள்கள் யாவும் பெருகினவென்று ஞாயக்
கணக்கினா லுரைத்து நின்றாரதையு நாங்கணித் தறிந்தோம்.

126. கனமொடு திண்மைவன்மை யிடம்பெறல் கனப்பொருட்காம்
பினர்சுருங் கியல்வதோடு விரிதலும் பேசுவார்முன்
னினமலா நெறியிலோட்டந் தமக்கென நிலாவியல்பு
மனமெனப் பரத்தல்வாயு திரவத்தின் மாண்ட பண்பே.

127. சமங்கொளறிரவத் தன்மை சாற்றியதிட பதார்த்த
மமைவுறு திரவமாக மாறிடும் வெப்பமுண்ணி
னிமைப்பினின் வாயுவாகு மின்னமுஞ் சூட்டையேற்கிற்
றமமுள கனமாந்தட்ப மழுத்தமு மதிகஞ்சாரின்.

128. கண்ணினிற் கெட்டாவாயு காட்சியினமையா வேனு
மெண்ணரு மநுமானத்தா னேதுவானமைவ; நேர்நேர்
தன்னணுக் கவர்ச்சி யென்றும் பிறவணுக் கவர்ச்சியென்று
மன்னிய வவைதாம் வாயுநீர் திடப்பொருளி னோங்கும்.

129. ஒன்றுமிலிடமே காணாதோங்கிய வுலகிற்; றண்ணீ
ரொன்றுமி லிடத்தின் முப்பான் மேலடியுயரச்செல்லு
மொன்றுமி லிடத்திலற்றே யிரதமங்குலங்க ளோங்கு
மொன்றிய மயிர்க்குழாய்க்கட் டிரவமிக்கு யருமன்றே.

130. இக்கணக்குயரின் வாயு விக்கணக்கழுத்தந்தேயு
மிக்கணக்கின்னவத்து நீரினுளியைந்து காட்டுஞ்
சிக்கற வுணர்வீரென்று சிறப்புறக் காட்சி காட்டி
மிக்கநம் முணர்வைமேலும் விளக்கிற்றிச் சாலையன்றே.

131. விண்படர் விமானமுன்னாம்மவ ருகைத்தா ரொன்னிற்
பண்பட வதனையொவ்வார் படர்ந்துபல் காதமிற்றை
விண்படர் கூட்டோ டாகாயத்தினின் விரைந்துசெல்லு
மொண்கல முலவிற்றென்னி னையுறாதோமென்பாரே.

132. ஓர்பொரு ளெறியினேர்கோட் டொழுகுறும் பான்மையின்றா
லோர்பொருள் வீழிற்றன் காலடிக் கணேயுறையுமென்ப
வேர்பெறப் பொருள்கீழ் வீழாதந்தரத்திராது தாபி
யோர்முனை மையந்தாண்டா துயர்த்திடின் விழாதுசாய்ந்தும்.

133. கோளெலா மொன்றையொன்று கொள்ளுறு நிலையினீர்க்குந்
தாளினை யுணர்ந்துமற்றத் தன்மையே யவற்றை யண்ட
கோளத்து நிறுவுமென்ற கொள்கையைக் குறித்தானன்றி
நாளவன் கதிர்கள் ஞாலப்பரப்பை முன்வெப்புறுத்தி,

134. மின்னார்மேற் செல்லியல்பும் பேசியே யாகாயத்துத்
தன்னமாய் வாயுநிற்குஞ் சால்புரைத்தவை பிரித்து
மன்னுறவுணர்த்தி வாயுவாங்கியைக் காற்றுவெப்ப
மிந்நிலைத் தெனக்குறிக்குங் கருவியை யியம்பினரே.

135. சாகர முப்புத்தோயா தமைந்திடிற் சாகுமுந்நீ
ரேகுறு பிராணி, யன்றி யெங்கணு நாற்றம்வீசிச்
சேகரத்தமைந்த மக்கள் சீவித்தல்கூடச் சாலா
தோகைநீர் மேற்பரப்பே யுறைபனியாகுங் கண்டாய்.

### 3 கவிகள் சத்தவியல் சாற்றுவன.

### Sound.

136. ஓசை வாயுவை யலைத்தே யொவ்வொரு திக்குந்தள்ளி
யாசைகளெங்குஞ் செல்லு; மாயிரத்தொரு நூறுகப்
பேசுவரடிக் கணக்கைப் பிறங்கியவிகடிகைக்கே
யோசைநீர் மரத்துலோகத் தோங்கும்பன் மடங்கினென்ப.

137. ஒன்றுமி லிடத்திலோசை யோங்குதலில்லை யோரோர்
துன்றிய துவாரா வன்றித்துகளற வொலிசெலாசா
னன்றுறப் பஞ்சூமூட்டை நாய்பஞ்ஞ மொலிசெவிக்கூட்
சென்றுகேளாது ; காதினடிச் சவ்வேயொலி கேட்பிக்கும்.

138. சத்தம்பல் லுருவங்காட்டுந் தன்மையதென்று மற்றோர்
சத்தமே மீட்டுமீட்டு மவ்வுருச் சமைக்குமென்றுஞ்
சத்தமிக் கோங்கிற்சேதஞ் சாதிக்குந் தன்மைத்தென்றுஞ்
சத்தநூலாசார் சாற்றச் சழக்கெனத் தள்ளாதேற்றோம்.

### 2 கவிகள் வெப்பவியலைக் கூறும்.

### Heat.

**139.** வெப்பமே பொருள்விரிக்குந் தட்பமே பொருள் சுருக்கும்
வெப்புறு முலோக மிவ்வாறெருழுகுதல் விரைவிற்காணா
யொப்புற வதனாலன்றோ வயரத முலவும்வீதித்
தப்புறத் தண்டவாள மிடம்பெறச் சமைத்தாரென்றார்.

**140.** சிலபொருள்கொண்ட சூட்டை விரைவினிற் செலுத்தவேறு
சிலபொரு ளதனைச் செய்யத்தாமிலாதழிந்து செல்லும்
நிலவியவு லோகங்கட்டை கண்ணாடி நேர்நேர் சான்றுஞ்
சலந்தருகாறீப்பற்றுஞ் சீவக்காலுதவும் வேறே.

**141.** உட்டணகிரணம் வாய்ந்த பரிதியாலுலகைச் சூழ்ந்து
கிட்டியவாயு மேலே கிளர்ந்தெழ வதனிடத்து
முட்டறக் குளிர்ந்தவாயு முன்வரு மதுவேகாற்றுக்
கொட்டிய கருவியாகுமுவை பருவத்தே தோராய்.

### 6 கவிகள் ஒளியியலைக் கூறுவன.

### Light.

**142.** ஆதவனொளியே பைங்கூழ் பிராணிகட் காக்கமீயு
மாதவனொளியு மேழு நிறங்களாலாய தென்ப
வேதமில் சிவப்புநாரஞ் செழிலுறுமஞ்சள் பச்சை
யோதிய நீலமவுரிச் சாயமுமூதாவாமே,

**143.** ஒவ்வொரு நிறமும்வேறுபிரித்திடிற் றனையொழித்துச்
செவ்விதிற் பிறநிறத்தைச் சேர்த்திடுமென்பசோதி
யொவ்வுறும் பொருள் வெளிச்சம் வீசிடவதுபரந்து
திவ்வியப் பாவைவாய்ந்த கண்ணுக்குட் டிகழுமன்றே,

**144.** ஒளிநெடுங்கோட் டினன்றியொடிந்து செல்வழக்க மின்று
லொளியுளவென்றாழ்க்கற்றைக் கந்தக்கல்லூடே சென்று
தெளிவுறப்புள்ளியாயிற் றீயின்பண்புற்றெரிக்கு
மொளிதிகணில வொருக் கியுதவுநீர்க்கல்லுமுண்டே.

145. ஒளியெதிரொளிப்ப தோடுநீரி னுட்சாய்ந்து காட்டுந்
தெளிவினைக்காட்டிப் பின்னர்விகடிகைச் செலவுதேற்றி
யொளியொலிதன்னின் வேகமுறவளைந்துசுட்டிமாறின்
வெளியினிற்பரந்த வென்றாழ்க்கரனமைமேவா தென்றார்.

146 தெளிவுறக்காட்டுஞ்சத்தி சேர்ந்தகண்ணாடியென்று
மொளியினைக்கான்று மூட்ட நோக்கவொல்லாமழுங்க
லொளியறுசுவரேபோல வூடுறநோக்குவார்க்குத்
தெளிவிலாத்தூலமென்று மூவகையுடலுட்செய்தார்.

147. எத்தகைத்தூலத்தூடு மெழிலுறப்பார்க்க நேர்த்துஞ்
சித்தரிதெளிவே யென்னச்சிறந்த ராஞ்சன்விளக்க ;
மெத்தனைகடினமான பொருளையுமுருக்கவேலு
முத்தமப்பிராணவாயு வுட்கொணீர்வாயுத்தீயே.

7 கவிகள் காந்தம் மின்சாரமிவற்றினியலைக் கூறும்

## Magnetism and Electricity.

148. காந்தமுத்தரத்தை நோக்கல்கா ணனத்துருவநோக்கி
னேய்ந்தவோர் முனையிழுக்கவோர்முனை தள்ளுமென்று
வாய்ந்துபதேசித்துப் பினிம்முறைமின்வலிக்குந்
தோய்ந்துளதன்மைசொற்றார்தோமறவுணர்ந்தோமன்றே.

149. காந்தத்தின்வலியே முன்னர்க்கடலுறு கலத்துக்குத்திக்
காந்தத்தைவிளக்கிநின்ற திற்றையுமதுவே காட்டுங்
காந்தத்தின் மேலாமின்னின் சாரத்தால்விளைந்தகம்பி
தேந்தயத்துள்ளசொல்லை விரைவினிற்சேர்க்குமன்றே.

150. மேகங்களொன்றோடொன்று வேகமாய்மோதும்போது
வாகையினிடித்துமின்னும் வழங்குதல்காண்போமஃதே
தேகத்துச்சேதமூட்டு நீரினிலாறிச்சேரு
மோகையிம்முறையறிந்தேயுயர்ந்தகட்டங்கட் கென்றும்,

151. கம்பிகணிறுத்திமாடப் பாணத்தைக் கடந்துமண்ணி
லம்பினதூற்றுக்காறு மமைத்தனரவுற்றுமின்னின்

வெம்புறவலியைக்கைக்குளடக்கிடி னதுவும்பற்பல்
பம்புறுதொழில்களாற்றப் பயன்படுமெனக்கண்டார்.

152. மின்வலியளிக்குநன்மை விளங்கநாமுரைக்கலாமோ
விண்ணியனீரிறுவி யிலையெனியென்றுமாகா
தென்னுநம்மெண்ணமாறியிப் பொழுதிம்மின்சார
மூன்னிடினிது வேச்வாதார மென்றுரைக்கநேர்ந்தோம்.

153. பெருநகர்வீதிக்கண்ணே பிறைபலவிளங்குமாறு
சருவியவிளக்கமீந்து தயக்குவதிம்மின்சக்தி
குருவின்றிவித்தையேறுதாதலிற் கழகங்கூடிக்
குருவினைநேர்ந்துமேலாமருமைகள் குறித்தோர்வாயே.

154. எத்தனைதொழில்களாற்று மியந்திரமிதனினேனு
மெத்தனையரியவானகருவிகளிதின் முயங்குஞ்
சித்தத்துளவற்றையோர்ந்து சிறப்புறத்தெரிக்கும்வன்மை
யத்தற்குமில்லையென்னினக்குண மெனக்குண்டாமே ?

155. தாதுமூலத்துளான தங்க முன்னுமுலோகந்
தீதறுமதனங்களிருந்தை கந்தகங்கண் முற்றுங்
கோதறவுணர்த்திப்பச்சை நாவியைக்குறித்துக்கூட்டி
யோதுவயாவுஞ்சாற்றவிச்சிறு நூலொல்லாதே.

## 3 கவிகள் ரசாயன வியலைத்தேற்றும்

## Chemistry

156. முதற்பொருள்மிசிரவத்துவென விருமுறைவகுத்துப்
பதமுறப்பொருள் பிரித்துப்பண்பறு கலப்பினுக்குஞ்
சதமுறும்ரசாயனச் சேர்க்கைக்குமாம் பேதங்காட்டி
விதமுறவளவுதாண்டினவையுறும் வேறுபாட்டை,

157. உரைப்பதேயன்றித்தண்ணீருள்ளு றைறவாயுதம்மைப்
பிரித்துப்பினியைத்துக் காட்டிப்பேசுவரிக்கணக்கு
வருத்தியவோர்பொருட்கு வாங்குகவிக்கணக்குத்
திருத்தமாய்ப்பிறபொரு ளென் றுரைத்து வாய்பாடுசேர்ப்பார்.

158. இம்முறைதெரியினீயுமி யாவருமலைக்கலைகளைக்
கைப்முறையாகக்காட்டிக் கண்கட்டுவித்தையென்னச்
செய்ம்முறைசெயலாமன்றி யுலோகங்களுருக்கிச்செய்யு
மைம்முறைக்கொல்லராற்று மவையொடுமருந்துமாமே.

## 9 கவிகள் சரீதத்துவவியல்

## Human Physiolcgy

159. மனிதனின்கங்காளத்தை நாற்றிறேர்மகிழ்விற்சாறுய்
துனியறவவயவத்தின் பகுப்பையுந்தொகுத்துப்பினனர்
முனிவறவவைபெருக்கு மொய்ம்மையுமுணர்த்திமூளைக்
கனிவுறுசத்திதேகவுறுப் பிணையியக்கல்காட்டி;

160. அன்னமுட்செல்ல வெச்சிலுதவிடவயிற்றினீர்க
ளன்னமுட்சென்ற காலையதனைச்சீரணித்துக்கூழின்
றன்மையினமைக்கப் பித்தங்குடர்க்கணேதனிநிணத்தைப்
பின்னமாச்செய்தல்காட்டிச் சாரத்திற்றூரால்பிரித்து,

161. குடற்புழைமேலுங்கீழுங் கொண்டுசென்றளித்தல்காட்டி;
யடல்பெறச்சாரமன்றே யிடக்கையிற்குருதிநாளத்
துடலுறப்பொருந்தி நெய்த்தோராகிமெய்யோடிநெஞ்சி
னிடையுறுமிதயவாருயிரலிற்சுத்தியாகி,

162. பூரகரேசகத்திற் பொருந்தியவாயுதம்மா
னெருறுமிருந்தைமுற்று நீங்கிநல்லிரத்தமாகி
யேருறமீண்டுந் தேகத்தியங்குவதுரைத்து, மூச்சுச்
சாருறுகுழாயைக்காக்குந் தொங்கலுண்ணாவுஞ்சாற்றி;

163. உணவிற்காம்பொருட்களுள்ள வுத்தமகுணத்தையூட்டித்
தளாவவொண்ணுதபாலின் முட்டையின்சாரந்தேற்றி
யுனத்தகுகொழுப்புமுப்புஞ் சருக்கரைபருப்புஞ்சோற்றி
னணைத்துறுசத்துமுன்ன வமைவுறுந்தகுதிசெப்பி;

164. மிகுகினுங்குறைந்துகாட்டினிற் கினுநோய்மிக்கோங்கி
நகுதாத்தேகவன்மை நலிக்குமக்கணக்கைச்சாற்றித்

தகைபெறமச்சைமேதை புழுத்திரணிணைத்தின்சத்து
வகையுறப்பிறவுநிற்கும் தொடிநிறைமலிவித்தின்னும்,

165. சருமத்திற்கழிவப்பையு நிறப்பையுஞ்சருவல்கூறிச்
சருமத்துமயிர்க்காலோங்கும் தன்மையைமாட்டி, யென்பு
பருமத்தேவளரத்தாது பழகுறுமுறைறவிளம்பித்
தருமத்தினியங்கவென்பைத்தசைநார்கடகைப்பதேற்றி;

166. ஒருபொருளுணர்ச்சி வாகாயிந்தியத்தாடேநாடி
பெருகியவழியிற்சென்று மூளையிற்பிறங்கமூளை
திருகவவ்வுணர்ச்சிக் கானவானையைச்சிறந்தளிக்கத்
தருகெனமற்றோர்நாடி தகுபணியியற்றல்சாற்றி;

167. வகுக்கலாப்பொருளையெல்லாம் வழங்கினோர் நகங்கள்கேசந்
தகைக்கும்பன்னரம்பு பற்கடயங்குமீந்தோல் கோழைத்தோ
லுகப்புறக்குருதியோடா வுறுநிலைத்தெரித்தாரன்ன
திகைப்பறக்கேட்டோம் பூமிசாத்திரஞ்சிறிதுசொல்வேன்.

## 7 கவிகள் அண்டகோளவியல்

## Elements of Astronomy

168 குவலயநடுவேநிற்கக் கூடியமற்றச்சோள்கள்
கவலறவட்டமாகக் கடுகியேசுற்றுமென்று
சுவையறச்சொன்னமாற் றத்துகளினைத்தவிர்த்துச்சூர
னவையறநிற்கச் சூழ்ந்துமற்றவைநடப்பதோர்ந்தோம்.

169. நவகோளென்றறைவர்முன்னோர் நாடிடினேழேதோன்று
மவற்றுளுமொன்று பூமியன்றியமதியாம்பின்னர்ச்
சுவைபெறநோக்கினோறே தோயுமன்னவைமால் சுங்கன்
குவலய, மாரல், பொன், சுன், கூறிடினிவையெல்சுற்றும்.

170. உன்னிப்பின் கண்டகோள்களுரெனஸ் நெப்தியூனு
மன்னியவிவையேயன்றி வழங்குவர்சத்தமீன்க
ணன்னரினவற்றிரண்டுதுருவத்தைநாட்டாநிற்குஞ்
சொன்னவீராறிராசி தொகுப்பநாண்மூவொன்பானே,

171. விண்ணுளமீன்கணக்கின் விளக்குவவல்லதாம
னெண்ணிடிலெவ்வோர் காலத்தியலுறுமுற்கைமீன்க
டிண்ணியகவர்ச்சிசோரிற் சேர்பவை; திரிசங்கென்று
கண்ணியருரைப்பகேட்டை கருதியமூன்று நாளாம்

172. ஆதவனின்றுமாலுமனைவுறு மொருமுப்பான்பா
லோதிடலற்றே சுங்கனீரையாறுலவவில்லைந்
தீதறுகுருவே கோளுட்சிறந்தபேருருவிற்றம்மை
நீதியிற்சுற்றநான்கு நிருமலமதியுண்டென்ப.

173. சூரியவீதிமுட்டைதோற்றிய வடிவமாகு
மேரினக்காரணத் தினியங்குங்கார்சீதங்கோடை
தாரினோர்பாகநாளாத்தயங் கவோர்பாலிராவாஞ்
சீரினிற்பூமிசுற்சூழ்ந்துருள்வதே செப்புமேது.

174. கோளெல்லாமென்றைச் சூழவோர்நெறிகுலவவில்லைந்
தாளுறச்செல்லும்போது தடைப்பட்டுச் சாயல்வீழ
வாளுவர் † ககணமென்றே யம்முறையொளிமழுங்கி
மீளுமாற்கலைகுறைந்து வெண்ணிலாப்பக்கந்தோறும்.

† கிரகணம் என்னுஞ்சொல் திரிந்து நின்றது

## 14 கவிகள் பூகோளவியல்

## Geography

175. குவலயமொருகாலங்கி கோளமாயிருந்ததென்று
மெவளவோகாலப் பின்னரிருந்ததீ நீங்கித்தெங்கின்
சுவைபெறுகாயினுறிச் சுறுக்கெனமாறிற்றென்று
நவையறவதனகட்டி ஞாலக்குந்தீயுண்டென்றும்,

176. மாறியவவசரத்து மருவியகுண்டுமேடு
மேறியதாகுமென்று மிவற்றுட்பின் னேரோர்காலத்
தூறியதீயுகைக்க வோரிடமோங்குமென்று
மாறியவிடங்கடாழ் வுற்றடங்குமென்றுரைக்கலுற்றார்.

177 இப்பொழுதுயர்ந்தநாட்டு மிடம்பலமுன்னாளு முந்நீ
ரப்பினுளாழ்ந்துநின்ற தன்மையைக்காணும்போமன்றிச
செப்புறும்பலநீர்ப்பாகந் தரையெனச்சிறந்ததோர்லோ
மிப்புவியமைப்புக் காலவியலினான் மாறுமன்றே

178. நவகண்ட மென்றூர்முன்னு ளவைநடையியாழிந்த சில்லோ
ரவமுறுமொழி யென்றந்தையகற்றுவாரது நாங்கொள்ளே
நிவமுறு மின்னுட்காட்சி நிலையுறிந்தேகல்கூடு
மவமெனவொன்றை நஞ்சிற்றறிவு கொண்டளந்திட்டேயோ ?

179. ஆயிரக்கணக்கா மாண்டு கழிந்த முற்காலத்தாடிக்
காயபல்லுயிர்ச சரீரசேடங் கடயங்கவின்று
மேயதுங்கண்ணுற் கணடும்விழிக்கிறார் கொண்டகொள்கை
தூயவையன்றேன் மாற்றுந்துணி வின்றிசசில மேனாட்டோர்

180. ஓமரென்று யர்கிரேக்க மெய்ம்மறைமை ந்த முற்றுந்
தீமைகற்பனைக ளென்றா மெரிக்காவற்றை யோதி
நேமமாய்ச சோதித்தாராகு நிசமெனத் தெரிந்ததின்று
நாமுறைபிறழக் கூறனலமலவுயர்ந் தோர்க்கென்றும்.

181. ஒவ்வொரு தேயததாருமவ ரவருணாந்த மாட்டுச்
செல்விதிணண்ட கோளவியலினைத் தெரிந்தார் சிறக்கப்
பல்வநீர் மிகுத்தபாரிற் பழசுறுமிக்காலத்தி
னெவ்வுற யாருமைந்தே கண்டமென்றுரைப்பரோர்வாய்.

182. சமுத்திரமத் தொகைத்தே சாற்றுவ ரம்சந்தோறுஞ்
சமித்திரள்சருவ நாளோனுதயமுஞ்சாய்வும் வேரு
யிமிக்கணக் குரையிற் கூடும்விதத்தினை யியம்பிப்பாகை
யமைப்பினைக் கூறியாங்கே யமைகுளிர் வெப்பஞ்சாற்றி;

183. அவன்மிசையாகி மீளமலைகளுமவலாய்ப் போன
நவையறு வகையுஞ்சாற்றி நன்முத்துப் பவளமுன்னு
மவையுறுமிடங்கள் கூறியாக்கிய பூவமைப்பு
மவைகடலமுழுந்திப் போகுமாற்றையும் விளக்கி மாதோ;

184. ஆதவன் வலஞ் சூழ்தோற்ற வாறறை தருவ கண்டத்
தோதிய நிலவமைப்பு மிமமுறு நிலையுமோதித்
தீதறுர் நட்சத்ர கைத்திறமதை விளக்கிப்பின்னு
மோதுவான் பருவங்காற்று மொழிந்து கன்னதிச் சிறப்பும்,

185. நாட்டுறுபூமிப் பண்புநாட்டுளோர் மொழியியற்கை
கூட்டியகுணங்கள் செய்கை கோத்றமதமுங்கூறி
யீட்டிய கனியனிக்குமிரும் பொருள்வற்று றேட்டோர்
கூட்டுமெங்கருவி யேற்றுமதி யிறக்குமதி கூட்டி;

186. கைத்தொழி லுணர்த்தி வாணிகஞ்செய்யுங் கைவலார்க்குத்
தத்தமபொருளை விற்குந்தலத்தினைத் தெளியக்கூறி
யொத்தபல்லேறயஞ் சான்றவொழுக்கமு மாசுந்தேற்றித்
தத்துறவாண்டை யேகுந்தடத்தினை விளக்கிப்பின்னர்;

187. பூதலவியற்கை முற்றும் புகன்றுபட்டணஞ் செறிந்த
நிதிலாத்தேய மீத்துச்சிறப்புறும் பொருளைப் பேசிக்
கோத்றமுன்னுளிற்றை பேதத்தைக் குறித்துச்சீவ
ஞேதுறவலவும் பண்புமுறைத்துச் சித்திரப்படத்தே,

188. நோக்குவிக் கெழுதுவித்துநனுக்கிப்பல் பொருள்விரித்துந்
தேக்கிய கவையினூட்டிச் சிறப்பிப்பாவற்றைக் கேட்டே
யாக்கிய தம்முணர்வை யகற்றுவார் சீடர்; தேய
மூக்கியே யொன்றை யொன்றுவல்லறு முறையை யோர்வாம்.

## 39 கவிகள் சரித்திரவியல்

## History of the World

189. சரித்திரமுறையாச் சாற்றுஞ்சத்தி நம்மவர்கட்கென்று
முரித்தலதென்னு மோசையுல கெங்கும் பரந்ததைய
டரித்திரணரியிற் கூட்டும் பகவனதருளாற் சற்று
விரித்துரைத்துலகக் காதைவிளக்குவனதனையோர்வாய்.

190. பாளையக்காரர் † தம்மைப்பாவலர் மன்னுமென்று
நாளுந் தர்முறையினேத்தி நவில்புறக் காதை போலா

தாளும்பன்னுட்டி ஞண்மைக் காளையர் பெயரைப் போற்றித்
தாளுறுந்தேயஞ் சான்றசீரினைச் சாற்றுகேனே.

† பாளையக்கார ரென்றது பெரும்பான்மைபற்றி யென்க.

191. உலகெலா மோங்குசீர்த்தி யுற்றுலகுயிரினோம்பி
நலமுறக்காத்த வீரநாடு காவலர்த நாம
மிலகுறச் சாற்றும்வன்மை யெனக்கிலை யேனுஞ்சற்றுச்
சிலர்வலியுரைப் பெனேனையோர் பெயர்தேடித் தேர்வாய்.

192. சீனமு மெகிப்து முன்னர்ச் சிறந்த நாடவற்றின் பின்ன
ரீனமில் பரதங் கீர்த்தியெய்திய தக்காலத்து
மேனிலையவனர் கூடிவிளங்கின ரெனினும் பாபி
லோனமு மழிந்தபின்பே யவர்களாரிய ரோடுற்ருர்.

193. அஸிரியர் தம்மை வாட்டியாட்டிய மிதேயர்கையா
னசித்தனர் பாரசீகர்; நலம் பெறப்பாபி லோனுங்
கசிவொடு முன்வந் தோங்கிக்கனம் பெறுந்தனதென்றே
யசியிலாதாண்ட மன்னன் கிரீஸஸை வென்றதன்றே.

194. ஆரியர் யவனர்தாமு மோர்குடியடைந்தோ ரென்ப
சீரியபாபிலோனர் செமற்றிக் வம்சத்தராவர்
கூரியசைரஸ் பாரசீகத்துக் குடிகொண்டோங்கி
யேரினிற் சார்டி ஸென்னுமெழினகரழித்தான் மன்னே.

195. துருக்கி யென்றுரைக்கு நாட்டையாசியா வெனமுன் சொன்ன
ருருக்கியஃதடைந்த பின்னர் கைரஸுமவன் பின்னேரு
முருக்கினுரெகிப்தே யன்றி முள்ளெனயவனர் தம்மைத்
தருக்கிய பாரஸீகந் தாழ்ந்திடுங் காலம்வந்தே;

196. மாவிடனோங்க மற்றையவனரு மதற்கடங்க
வாசியாவன்றிப் பாரசீகமுஞ் சாமர்க்கண்டு
மாசிலாச்சிந்து வாற்றினோட்டமு மணைந்துவெற்றித்
தேசினையடைந்தான் சீர்த்தி யலெக்ஸந்த ரென்பான் மாதோ.

**197.** இதற்குமுன் யவன ரார்ய ரிசைந்துமிக் களவளாவித்
துதிப்பருங் கலைகள்யாவுந் தோய்ந்தொழி லெய்திநின்றார்
மதிப்பரும் வான நூலு நாடகவியலுங் கொல்லக்
கதிப்புறு பொறிகளார்ந்த விஞ்சியுங் கழறுஞ்சான்றே.

**198.** யவனர்வீறெய்தி நிற்க வுரோமருமவர் கால்பற்றி
நவமுறவுரோமநாடு நாட்டினரன்றி யின்னோ
ரவியறு விளக்கமென்ன வாண்மையின் மிக்குச்சான்று
நவையறுகார்த்தஜீன நாட்டினை யடக்கினரால்.

**199.** உரோமரும் யவனர்போன்றே யூரினைவகுத் தாரேனுந்
தராதலத் தொழுங்கமைப்பி லவரைத்தாழ்த் தினவரில்லைப்
பராபரனரு ளாலன்னார் பார்புக **ழான்னிபாலை**
வரோதயரென்ன வாட்டி மகிபலகைக் கொண்டாரே.

**200.** குடியரசமைக்கு முன்னர்க் கொடியகோற் றடிந்தாரேனு
மிடிபெறு மிந்தியாவின் வேற்றுமைக் குணங்கைக்கொண்டு
தடையுறச் சாதியேற்றக் கீழ்மையைச் சாதித்தலைந்து
நடைபெறலருமை கண்டு நாட்டுச்சேமத்தை நோக்கி,

**201.** யாவரும்மதிக்கக் கைவிட் டின்புற்றாரவருட் **கேடோ**
தாவருவலியிற் சல்லா தழங்குசீர்ப் **பாம்பிசீஸ**
ரோவருமரசை மீட்டுமுயர்த்த **வாகஸ்ட** ஸோடு
மேவருஞ் செய்கை**நீரோ** மேன்மைவாய் **கான்ஸ்டன்டைனும்,**

**202.** இன்னவர் சிறந்து நின்றாரிவர்க்குளே யாசியாவுஞ்
சின்னமுற்றெய்திற் றன்ன சேர்க்கையின் வலியிழந்து
முன்னருமுரோம ரூணர்மோது போர்க்குடைந் தழிந்தார்
தன்னமெய்தாது சோர்வர் தாழ்ந்தவர்ச் சேர்ந்தாரன்றே.

**203.** இதற்கு ளாரியருட் டோன்றியிரும் புகழெய்திமாண்ட
துதிப்பரும் **புத்தபிட்சு** தோற்றியமதத்தர் தம்பாற்
கதிப்புறுஞானஸ் நானவொழுங் கினைக்கற்ற **யோவான்**
விதிர்ப்பறு சீடரென்னச் **சேசுவும்** விளங்கினரே.

 

204. அவர்மதத் தவர்கடேய மெங்கணு மகன்றழுத்த
நிவமுறு மனத்திட்பத்தா லருளொளி லையான்மார்த்
ரவமுறுதந்த மெய்த வாக்கினு வருட் பீடர்
தவநிலைப் பாலுஞ்செய்த தன்மைகளறைய வற்றோ?

205. உரோமருங் கிறித்துமார்க்க முவப்பொடு தழுவிநின்றார்
தராதலத்தூண ரின்னர் தலையெடுக்காது மாய்த்தார்
சிரோதயாசி யுற்றகோள் வலிசிறத்தல் போலக்
நிராமயமதமும் வீறு நீண்டுலகோங்கிற் றன்றே.

206. உலகெலா மோர்காற்புத்த மொளிர்ந்தது போலசேசு
நிலவியமதம் பரக்கநின்ற தலைநிடையின் மெக்காத்
தலவிசேடத் தாற்செய்த தவத்தினுபீ பிறந்து
குலவியதம் மதத்தைக் கோணைவாள் வலியிற்கூட்டி,

207. தம்மவர் பிழையைமாற்றிக் காலத்தைத் தழுவிசசென்று
நம்மவம்மதமும் வாளின் வெற்றியா லநேகநாட்டை
யிம்மெனப்பிடித்த தக்காலிந்தியா வந்தமாந்தர்
வெம்மைசேரங்கி போற்று மேன்மைய ராவாரன்றே.

208. ஆசியாவன்றி மேலை நாட்டினுமகன்று மையத்
தேசஞ்சார் கடலைசசூழ்ந்த தேயங்கண் முழுதுமாண்டு
காசறமேனுட் டார்க்குக் கலைபல வளியினூட்டிப்
பேசுவார் நடுக்கமெய்த வெற்றியிற் பிறங்கிற்றன்றே.

209. துருக்கருங் கிறித்துமார்க்கத் துல்லியர் தாமுங்கூடிச
செருச்செய்தாரன வில்காலஞ் சேசுமார்க்கத்தார்வென்று
ருருக்கொளமுன் னர்சென்றே யூரொப்பாவட திசைக்கட்
செருக்கொடு செறிந்தவார்யர் கிறித்தவர்தமைச் சிதைத்தார்.

210. ஆலைப்பாலுற்ற வீயுமதற்கு ளேயழுந்த லொப்ப
மேலைப்பாலுற்ற வின்னோர் மேலைப்பான் மதத்தாணூர்
கோலப்பாலவரே யல்லாச் சமயத்தைக் கோட்டிவென்றார்
சாலப்பாலியன்ற வைந்தாஞ் சாரலைை வினவொயே.

211. ஆட்டமன் ராச்சியத்தை யாண்ட **ஸாலிமனை** வென்று
நாட்டினிற் சயத்தைநாட்டி மன்னர் மன்னவனாவாழ்ந்து
கூட்டிய நாட்டைப்பின்ன ராளுவோற் குறித்தளித்த
தாட்டிகனவனையன்றோ தடையற நோக்குவாயே.

212. அயிரோப்பா முழுதும்பற்றி யாட்கொண்ட சேசுசாற்றுஞ்
செயிரறு மதமுஞ்சில்லோர் செய்பிழை தன்னாண்முட்டேற்
றுயிரிழந்தேனும் வேறுகொள் கையையுறுத்த நேர்ந்த
வெயிரறு **வெஸ்லி கால்வின்** வகுப்பினர்க் கொண்டதன்றே.

213 தேவர்முப்பத்து மூன்று கோடியர்த் தெரித்தாரென்று
பாவமண்வாயுட் கொண்டு பகர்பவர் வாயடைக்கத்
தேவதாவாட்சி யொன்று திகழவந் தரத்தினிற்க
வாவிகள் மக்களாக வணைவதைச் சிலரறிந்தார்.

214. அன்னவர்க் கிறையா**வல் லென்கார் டேக்து**மெழுந்தானாவி
நன்னயச்செய்கை யோராநல மிலார்நாப் பூட்டிட்டான்;
முன்னூறு முணர்ச்சிமாறி நாட்டுணர் வோங்கமுன்வந்
தின்னலப்பல தேயங்க ளயிரோப்பாவியைந்த தன்றே.

215 அவற்றினு ளொன்றையொன்று முன்னுறவடக்க வுன்னித்
தவத்தினினியைந் தோர்தந்தம்வலியினைக் காட்டன்மானக்
குவித்தெழுந்தன வவற்றிற் றீபகற்பங் குறித்த
வவிப்பருங் கீர்த்தி நம்மாலளக்கரும் பெருமைத்தாமே!

216. பூமியேற்பாகந் தோர் நாடுளதெனப் பொருந்திக்கண்டு
தாமுறுநன்மைக் கென்றுஞ் சார்ந்துள பொன்னைக்கொண்டு
நாமகீருலகத்தின்ன வுலோபிநாங் காணோமென்ற
வேமமிலுரைக்குச் சுட்டாவிருந்தநா டொழிந்ததன்றே.

217. ·ருமநாட் டோக்கமென்று கரு**தேலிச பெத்து**மற்றும்
வருமங்கொண் டுருஷியாவை வாழ்வித்த **பீடர்**தானுஞ்
செருமனிச் சிறப்புக்காத்த **பிரடரிக்** கென்பான்முன்னாத்
தருமமாயாண்ட மேலைத் தரணிபர் பலராவாரே.

218. பரங்கிநா டெழுந்த தப்பாற்பாருளோர் முரணைத்தேய்த்த
வரங்கிளர் **போனபார்ட்டு** மலிவளத்தேய முற்று

முரணறத்தேய்த்தா னெல்ஸன் வெல்லிங்டன் முன்னுச்சாற்று
முரம்பெறு காளையர்மாட் டொடுங்கின னவலமெய்தி.

219. இதற்கு முனெழுந்த மற்றைத்தேயங்க ளெல்லாந்தத்தங்
கதிப்புறு மெல்லைநாட்டக் கண்டனமேனை நாட்டை
மதிப்புறவாட்டுஞ் சார்ல விருவராமருவி நின்றார்
நதிப்புனறத்து நாடாம் பவெரியா சுவிதன்மன்னர்.

220. சமரச முணராவேந்தர் சமயத்தர் சிலரைவாட்ட
வமைவொழிந் தவர்தணந்தேயமெரிக்காநோக்கிச்சென்று
தமையொத்தா ரோடுசேர்ந்து தயக்கினர் மாகாணங்க
ளிமயத்துப் பிறந்தவேதாந்தம் மவணெழில் பெற்றன்றே.

221. மேலைநாடிங் ஙனுகத் துருக்கருங்கிழை மேவி
யோலமிட்ட லறப்பன்று டொறுக்கினு ரிந்தியாவு
மேலைநாட் குறையாவின்ன மேவலார்கைக் குட்பட்ட
தேனுறுந் தவமிலாருக் கெத்தொழில் பலிக்குமன்ப.

222. சந்திரகுலத்து மன்னர்சார்ந்த வெற்குலத்து வேந்த
ரந்தமா யவரோடொப்ப வாண்டபாண்டியரவர்க்குச்
சந்ததஞ்சம மென்றெண்ணுந் தகைபெறு சோழராந்த்ரர்
நந்திய தேவராயர் பல்லவர் நலிந்ததன்றி.

223. நந்தனே மோரியதப்த னசேரகனு நாட்டிருமை
நந்துவிக்கக்கருரிற் சிதையரை நலித்த கோவு
மந்தமாயவனைவென்ற காலியுமகலக் கொள்ளை
முந்துற வந்தோர்கையின் முழுகுநாட் டிடுக்கணுக்கி.

224. மாண்டசீர்க் குணமுஞ்சாதி மதச்சமரச முங்கொண்ட
வாண்டகை யாக்பராற்று நன்றியை யறையலாமே?
பூண்டநற்கரு மந்தேய்க்குந் தேய்மதிப் பூபாலர்க்கு
ளீண்டியுமிவனளித்தவியையினை மறவே மென்றும்.

225. மோகலர் செருக்கடக்கச் சிவாஜியு முயன்றானக்
கோகையினவர்களிந்து சமயத்தினென்ற வுன்னி
வாகையிற் சீடவர்க்க மவிவித்தானிதற்குண்மேலை
யோகையோர் வணிகமாற்ற வுற்றனரது நஞ்சீர்க்கே.

226. நபிமதத்தவருமாழ நாடு கல்லோலமாகத்
தபிப்புறக் கூட்டக்கொள்ளை சிசுக்கொலை தழங்கநாளுஞ்செய்
தபம்பலித்தென விந்நாடு தாக்கணங் குறைந்ததோளா
ரிபமெனவண்மை யேய்ந்த வாங்கிலர்க் கியைந்ததன்றே

227. ஆங்கிலவணிகச் சாத்துக் கடங்கிப் பிறகலகமிட்டுத்
தேங்கியவருளுஞ் சால்புஞ் சிறந்த **ராக்கினிக்குள்ளாகி**
யோங்கியவ வரைமன்னர்க் கரசியாயுறுத்திப் **போன்**
றுங்கிய கோலிற்றக்கபழைமை மீட்டணைந்ததன்ப.

228. கீழ்த்திசை யோரின்மேலைத் திசையரே வலிகிளர்ந்தோ
ராழ்த்தைதையறியு மென்னு மவர்மொழி பொய்க்கஜப்பான்
றுழ்த்திற்று லுருஷியாவைச் சட்டென வீசரெண்ணிற்
பாழ்த்தவோர் நாடுமேறும் பளகறுத்தெனத் தேர்வாயே.

3 கவிகள் கணிதவியல்

Mathematics.

229. இத்திறமுற்றுங் கற்றவிட மிக்கல்லூரி நண்ப
முத்திறத்தோ டொன்றுக்குங்கணிதத்தின் மொய்ம்பைமுற்று
முய்த்துணர்ந்து ரைக்கவென்றுன் முடியுமோவுரையிற்சான்ற
வுத்தமர்தம் பாலோரினு வப்பினை விளக்குமன்றே.

230. நால்வகை விதியுமாற்று நவிலுறும் வழக்கு வட்டி
நூலுறப் பலகணக்கு நுவலுவரன்றிப் பீச
மேலுறுங் கணக்குஞ் செப்பிப் புள்ளியினியைந்த கோட்டா
லாலுறு முருவநாட்டி யவைதமை யளக்கவாக்கும்,

231. விதியையும் விளம்பிக்கண்ட கனப்பொருள் வட்டங்கோள
மதியுறு சிகரங்குட்ட மதிக்கு நற்கணக்கை யூட்டித்
துதிபெற வுரைப்பரன்ன தூயர் பாலுணர்வாய் பாடை
விதமுறை யடங்காகூறின் விவிதமாய்ப் பல்குமன்றே.

## 24 கவிகள் பிராணியியல்

## Animal Kingdom.

232. நால்வகைத் தோற்றத்துற்ற வெழுவகைப் பிறப்பைமுன்னோர்
சால்புறக் கணித்தார் சீவனோரறிவுயிர், சான்றோருங்கு
மேல்லையினிரண்டு மூன்று நான்கைந்தாறிவை முன்னேத்திப்
பால்பெற வகுத்தார்நிற்கப் பகருவென் மேலைநூலே.

ஷை வேறு

233. தாவரத்திற்கண்டறிந்தசீவாணுப்பைம்முறையைத்தாலந்தன்னி
லோவறுசங்கமத்துயிர்க்கு மொப்பிட்டார் பரிணாம
வுண்மைகண்டார்
பாவுறுபண் போர்ந்தனராற் பவளமீரியற்கை கொளும்
பழகின்ற
சீவகணத்தவளை நிலநீருறும்வானரமனிதன் சிறந்தானுனே.

ஷை வேறு

234. மனிதனேயுயிர் வர்க்கத்தின் மாண்டவனறிவான்மூளை
கனிதருசிறப்பான் வாக்கான் கடவுட்டன்மையினான் மற்றம்
மனிதனை நிறங்கள்பற்றி மாங்கொலன் காக்கசீயன்
பனிதருநீக்கிரோவ னெனவகை பகுத்தான்றே.

235. கிடைத்த பேருணவொருங்கு கேழுற விழுங்கிப்பையி
னடைத்துவைத் தோரிடத்தே யமர்ந்தபின்னசைத்து மென்று
நடைப்பதக் குரம்பிளக்க நடப்பனவாவா மொட்டை
விடுப்பருமாடு மானும் மேவுமொட்டைச்சிவிங்கி.

236. கதிகொடுநடந்து காலின்குரம் பிளவாமை காட்டி
விதம்பெறு மிருகமாவாம் வேசரிகழுதை மட்டக்
குதிரை போர்க்குதிரை கொள்ளுங் கூறியவிவற்றின் பற்கள்
பதிவுறப்பசுப் போலாது பத்திகளிரண்டு முண்டே.

237. அசையிடு மாவைப்போலா தவைக்கிரைப்பையு மொன்றே
தசைதடித்தியல்வ மேதித் தந்தியுங்கொம்புமூக்கு
மசையுநீர்க்குதிரை பன்றி யானவை யெல்லாமத்த
மிசைவன நீரிற் சேற்றிலிருந்திடப் பிரியமென்ப.

238. மனிதனையொத்த சீவன்மர்க்கடமிதற்கு நான்கு
குனிதருங்கால்கை; வானீள் குரங்கு நாய்க்குரங்கினேடு
மனிதமர்க்கடமு மின்னமருவுவ விதனல் டார்வின்
மனிதன் வானரத்தா னென்ருன் மற்றுவைசாக முண்ப.

239. நாயினைப் போலவன்பு காட்டுநன்மிருக முண்டோ
தாயினும் பரிந்துமாந்தர் சாற்றிய வேலைசெய்து
சேயினுஞ் சிறந்துநன்றி தெரிந்ததிற் கோனய் சேர்த்த
வாயினிஸ்கேரியத்துந் † சீடனேயாதல் போலாம்.

240. நாற்றதனை வீசுந்தோலினரி யெலிபந்திக் கொக்கின்
மாற்றமு முறையார் நம்மோர்வழங்கு மவ்விருகத் தோலி
னூற்றத்தையுணர்ந்துதொப்பியுஞற்றுவர் பிறர்,வேட்டைக்காஞ்
சீற்றத்தவுயிராம் புலி னினத்தினைச் செப்புவோமே.

241. நகங்களைப் போலாதுள்ளும் புறம்பினு நகரும்பூனை
யகங்கொளு மினத்தவேங்கை வரிப்புலி சிவிங்கியாளி
யிகந்தவூனிர விற்றேடு மிவைதமை நாரியைந்த
வகந்தனின்வாழ்வ; வெண்கு மரத்தின் மேலிவருமன்றே.

242. இதுவரை யுரைத்த முற்றுஞ் சராயுச மென்ப பல்லாற்
கதுமெனக்கனிகள் கொட்டை கொறிப்பன வணின்மரநாய்
புதருறு முயன்,முட் பன்றிபுகலு முள்ளெலி கங்காரு
சதமுறத்துருவகண்டத் தகம் பெறுஞ்லு மாமே.

243. இவற்ரெடு கீரிப்பிள்ளை யியைவுறு நகுலம் பாம்பைச்
சுவைபெறக் கடித்துக்கொல்லுஞ்; சொல்லுவர் புழுகுபூனை
நவையறு பிறவுங் கீரிச்சாதியின டப்ப வென்றே
யுவையிற்றிலொன்றை யொன்றுகொன்று தின்றுயிர்பிழைப்ப.

244. காலிலாதூர்ந்துங் கால்கள் குறுகியேயியன்று மார்பு
தாழுறு மரணைபாம்பு தறுகணூர் முசலிகோம்பி
சாலப்பற்றுறுதிகொண்ட வுடும்புதேள் பல்லிதேரை
யாலுவபல நிலத்தினீரினு மலைவவாமே.

† Judüs Iscariat.

245. நீரினிலொழுகுமச்சநெடுஞ் செதிளியைந்து நீந்த
வேரினின் மூழ்கவாலினுதவியுமேற்றுக் கீழ்வாய்
சாருநற்செவுளின் மூச்சுத்தாங்கி விட்டுண்டுபச்சென்
நீரமாங்குருதி யேற்குமூர்வவு மிக்கணக்கே.

246. சுறவொடு திருக்கைவாளை தோற்றுபாவாடை மீன்முற்
சிறக்கும்பல் பெருமீன் முந்நீர்த்திரிகுவபடவு நாவா
யொறுக்குவ.சிறுமீனுற்றி லொழுகுவ கூட்டமாகப்
பறக்குமீன் மின்மலங்குபழகுதல் கூடவோர்வாய்.

247. நீரினிற்றிரிந்து நாற்கான்மிருகத்தி னியற்கைகொண்டே
யேரினிலரைமணிக் கோர்முறை வெளியியைந்துமூச்சுச்
சாருவான்கொண்டு குட்டியீன்றுபாற் றமுவியீந்து
தாரவர் வேட்டையிற் சாஞ்சலசரந் திமியுமுண்டே.

248. முட்டை யிட்டொளிரு மூர்வ மச்சம் வான்பறவை மற்றுங்
கொட்டுறு தெறுக்கா ணண்டினலகில வெடித்துக்கூடு
மொட்டிய முட்டையிட்டுப் புழுவென வொளிர்ந்து தோன்மாற்
றிட்டுநற் கூடுகட்டிப் பூச்சியா யிவையவுண்டே.

249. வாலுறு பறவைதம்மின் வலியனேவலிது மூக்குங்
காலுறு நகமுஞ்சான்று கழறிடுங் கழுகுமுற்பு
ளேலுறு மிவ்வினத்தின் மரத்தொடு மீனைக்குத்திச்
சாலத்தம் வயிறுதூர்க்குஞ் சகுனநீ ளலகுசாரும்.

250. தோலடிப் பறவைவாத்துத் துசளறு மனந்தராவா
ஞாலத்துப் பறவைத்தோட்டி நலக்கவோரினத்தைக்கொள்ளுஞ்
சாலவே கொட்டைகோதுந் தத்தைமூக் கொடிந்துசாரு
மேலுற விவற்றைநீந்து மிருந்திடுங் காலவென்பார்.

251. பறவையு ளழகுவெய்யிற் பழகுறு மண்டலத்தாஞ்
சிறையழ கிலாதுபாடுஞ் செவ்விய மிதவட்டத்தே
பறந்துசென் றி டங்கடோறும் பயிலுவவென்று மோர்நாட்
டுறைபவையென்றுங் காலவியலினிற் சேர்வவென்றும்,

252. பன்னெறிமாட்டிப் பாகுபாட்டினை வகுப்பர்பின்னு
நன்னெறிப் புறவுகோழி யினத்தையு நவின்றுவாவல்

முன்னிய விருகம்பட்சி யிருவகை முயங்குமென்பார்
நன்னர்தீக்குருவி நாட்டினடையினிற் சிறந்ததாமே.

253. கோட்டுறுமாந்தை கூகை குயலையங்கொள்ளாச் சாதி
நாட்டுறும்பட்சி தம்மைநடைபெற வகுப்பர்பாதத்
தூட்டிய நகத்தால்வாயி னலகிறு லுணர்ந்துசான்றோ
ரேட்டினி லடங்காநாங்கூழ் கோபம்பேன் சிதலெறும்பே.

254. சராசர வுயிர்கண்மேவுஞ் சடரத்திற் சீவரேணு
தாரதாத் துறைந்துவேண்டுந் தாத்தினிற் காற்றுத்தண்ணீர்
விராவுறு முண்டிகொண்டு மிளிர்வன பலவாமன்ன
பராபர னருளொழிந்தாற் பட்டுமண்ணுறுமன்றே.

255. அநுபவத்துணர்ந்த வொன்றை யறைகுவன் செவிக்கொளன்ப.
தநுபல நோக்கிற் றூழ்ந்தவுட லெலாம் பயனளிக்கு
மநுமிதித் தறிகபுந்தி யகன்றுள மனிதன் காறுந்
தநுப்பயன் குறையுமாந்தர் தநுவொரு பயனுமின்றே.

வேறு.

256. பொங்கு தாவரப் பூரண நூலினை
யொங்கு கேள்வி யுயர்ந்தவர் பாலணைந்
தங்கமாக வினவி யடைகுவாய்
தங்கு கானிய றன்னினுஞ் சாற்றுகேன்.

## 40 கவிகள் நிதான வியல்.

## LOGIC Induction.

257. எண்ணுந் தர்க்கவியலை யியம்புகேன்
வண்ணமாக மதித்தறி நண்பயா
னுண்ண நூலை நுனித்தறிந்தேனலே
னெண்ணும் போக்கினியம்புவெ னேற்கவே.

258. பதார்த்த மேழுபகுத்தனர் நம்மனோர்
யதார்த்த மாகவ ளவைகணென்கென்பர்
ததார்த்த பக்கமிரண் டுதயக்குவா
ருதாத்த நண்பவிதி மறையோருவாய்.

259. வரையறுத்து வழங்கின னேனுமேற்
றரையியைபு மயக்குவன் கேட்கநீ
யுரைவகைத் தொகை யுண்மை யுவமித்து
நிரையிற் கேள்வி முடிவை நிறைப்பரே.

260. உலகிற் பல்பொரு ளூற்றிடினும் மவற்
றலகில்பேத மறியப் படினுமோர்
நலவொழுங் கினடை பெறு நேர்மையை
யிலக நாட்டியிறைக் குணங்காட்டுவார்.

261. மக்கட்பேதம் வழங்குதன் முன்னர்கல்
லொக்க நீரினுரைகுண மூட்டியே
தக்க வானிற் றயங்கிய கோட்களின்
மிக்க நாளின் முறையை விளக்கியே,

262. சடக்கு ணத்தினைச் சாற்றி யுயிர்க்குண
நடத்திச் சீவனடக்குஞ் சராசரந்
திடத்துக் கூறிப் பின்றேங்கிய நீர்நிலத்
தடத்து வானினுலாவுதல் சாற்றியே,

263. உயிர்களொன்றினை யொன்று முருக்குதற்
கியையும் வன்மை நிறங்குண மேத்திப்பி
னுயருமாயு ளதிசமுறைய வோர்ப்
பியையு மெய்யினியைபையியம்பியே,

264. உலகிற் கண்டநெறிகளுக் கோர்முறை
யிலகவுண்டென வெண்ணியவற்றிற்காம்
பலவுதாரணம் பார்த்துத் தொகுத்தபின்
னிலவ வோர்விதி நாட்டுவர் நேமியின்.

265. அன்னவற்றில் வழுவுறினசைவை
பின்னமாக்கிப் பிறங்கிய வேறோர்சால்
புன்னிமேலு முதாரணங் கூட்டுவார்
நன்னலத்த விதியினை நாட்டுமுன்.

266. புறத்தமைந்துள தோற்றங் கண்டோர் பொரு
ளூறுத்திப் பின்னதனுட் குணஞ் சோதித்து

சிறுத்தி யிவ்விரு நேர்மையு மொத்திடிற்
பொருத்தமாக்கிப் பிரியிற் பிரித்துமே.

267. பாகுபா டமைத்தாக்கிய பார்வையி
னேகையாற் றமவுண்மை யறிவிற் சொற்
சேகறுத்திடு வாதத்திற் சேர்த்தவை
யேகமாக்கிப் பொதுவிதி யேற்றுவார்.

268 தர்க்க சூத்திரங் கற்குமுற்றோர்செறி
வர்க்கமா யுளமாகலைப்பண் பெலா
மர்க்கனென்ன வறிந்து தெளிந்திடன்
மிக்க நன்மையை மேதினிக் கண்டரும்.

269. யாவுமோர் முறைப்பார்வை யிறையுந்து பண்
மேவு பான்மையை யெய்தி மிளிருறு
மோவி லாற்ற லுணர்வினர்க் கன்றியித்
தாவி றர்க்கந் தயங்குவதில்லையே.

270. கலைக்கடலை யறிவெனுங் கப்பலா
னலைத்துத் தாண்டியதன்கரை சேர்ந்தபி
னிலைத்த சீரினிறுவி யுலகெலா
மலைக்கவாத மியம்புவர் மாந்தரே.

271. கரையிலா தகன்றோர்ந்த கலையையென்
னுரையிலார்க்க வுளங்கொள வுட்கையாற்
றரையி னேகும் பரிதிதகைத் திடக்
கரமிலா தவனெண்ணல் கடுக்குமே.

272. தோற்ற மேழினிற் றோற்றும் பிராணிக
ளாற்றுஞ் செய்கையறிவ தேயன்றி மேற்
றோற்று மக்களின் றூய்மையு மன்னவர்
வீற்று வீற்றுறுப் பாற்றி விளைப்பவும்,

273. புத்தியாவி பொருந்து நிலைமையுஞ்
சித்தந் தோற்றுவ செய்ய வியைப்பதற்
கொத்த மூளையுயர்ந்த தலத்தையுந்
தத்தி யோர்ந்து தயங்குதல் வேண்டுமே.

274. பொறிகளைந்து புலனைந்து மற்றவை
நெறியிற் செல்ல நிறுத்து மனமொன்று
குறியிலம் மணங் கொள்ளக் கொளுத்திடு
மறிவு நிற்கும் புருவ நடுவையும்.

275. மற்றுஞ் சத்திமருவு தலத்தையு
முற்ற வோர்ந்தபின் மூளையு ளொவ்வொரு
நற்றுறையினை நன்கு விளக்குமக்
கொற்ற வன்மையுங் கூர்ந்திடல் வேண்டுமே.

276. ஒன்றைவிட்டு மற்றோர் செயற் செய்கையிற்
றுன்றிநின்ற கருவி துளக் கற
மன்னுமம் முறை யோர்ந்து மதியிலார்க்
கொன்று சத்தி யொழிந்துள தோர்கவே.

277. மத்தர் பேயர் மதியிழந் தோருக்குத்
தத்தஞ்சத்திக டட்டழிந் துள்ள சீ
ருற்ற றிந்தவர்க் கொத்த முறையினைத்
தத்து வாகடர்சேர்த்துவ தேர்கவே.

278. இன்ன பான்மை தெளிவி னியைந்தபின்
மன்னு நாட்டினின் மக்கள் வழங்குறுந்
தன்னமில் சமச்சோதரத் தன்மையை
யுன்னி நாடியுணருக னேர்மையே

279. ஒரு வகுப்புள மாணவ ருண்மையிற்
சருவவோர் தகைசாரலர் யாவரு
மொருவ ஞோங்கமற்றோர் மகன்றாழ்வதைக்
குருவுணர் வதுகண்டு குறிப்பரே.

280. இன்ன வேற்றுமை யெங்கிருந் தெய்திய
தன்னபேத மறிவினி துயதே
முன்னருற்ற முழுக் கல்வியாளனு
முன்னுறாத முழுமகன்றானுமே,

281. மனத்துச் செய்கைகண் மாறிய தன்மையி
னினத் தொழிந்துகீழ் மேலு மியைந்தனர்

தினத்து மிம்முறை செம்மையிற் காட்சிக்குக்
கனத்து நிற்பது கண்டன மன்பனே.

282. யவனர் முன்பொர்கா லியாருஞ் சமமெனத்
தவளவாட்சி தழுவிநின்று றன்றிக்
குவலயத்தவர் கல்வி குறித்திட
வெவளவோ முறை யேத்தின ரேத்தியும்,

283. மேலடைந்து மிளிர்ந்தவரின்றொகை
சாலவற்பஞ்சனங்க ளெல்லாஞ் சமத்
தேலு நல்லர செய்திய நாட்டினி
லால வோர்மகன் பேரே யறைவரே.

284. நஸு·வெல் டெனும் ரூபங்குண நிறை
யாசுதந்திர வாண்மகன் பேரினைப்
பேசுவாரன்றி வேறொர் மகன் பெயர்க்
காசு நீங்குமுலகங் கழறுமோ?

285. குடியரசு குற்றிய நாடுக
ணெடியி ஞெரிறைக் குள்ளே நடங்குத
னெடியவாயுணி றைந்தவர் தேறுவார்
படியினிந் நிலைமாறலும் பண்பதே.

286. ஒருவர் நாட்டினுக் குற்றன மற்றொரு
திருகு நாட்டினர் தீயவென் றெண்ணுவார்
பெருகப் பேசுவ தெற்றுக்குப் பெண்கள்கந்
தருவ மாற்றலிந் நாட்டினிற் றப்பதே.

287. குஞ்சிக் கண்ணுங் குறைசொலவிந்த நாட்
டெஞ்சிநின்ற வழக்கென லாயிற்று
லஞ்சொலார் பலராற்று மணவினை
கொஞ்ச நாளின் விலகுதல் கூடுமே.

288. படாவெனுஞ் சொ லடாதெனச் சான்றவர்
படாத சொல்லைப் பகர்தனிறுத் தினர்
விடாத பன்மை யொருமை † விளைவினைத்
தடாது நிற்குந்தமிழ்மொழி யென்றுமே

† ஒருமைவிடாத பன்மை யென்க - பிதாவந்தார் போல்வன.

289 விகுதி கொண்டுவிளைத்த பொருளினுற்
றகுதியோங்க த்தடையுற்ற தென்பரான்
மிகைவழுக்கினைத் தேயத்து மிக்கவர்க
தொகுதி சொல்லும் பதத்தின் விளக்குவோர்.

290. அவனவரெனும் பேதமறை வராற்
புவனமுற்ற வுணர்ச்சி பொருந்துமாற்
கவனமாக மதித்திடிற் கண்ணிய
ரவை லவரென்றிரு சார்பின ராவரே.

291. வழக்கை மாற்றுமுன் சொற்களை மாற்றலே
பழக்கமாற்று நற்பண்பென் றுரைப்பார
சழக்கதென்று கரைந்து சருவிய
வழக்கையே சிலர் மாற்றுவர் முன்னரோ.

292. சூளை நன்மக னென்கின்ற சுட்டினை
யாளுவோ மொருகா ண மாகயா
நாளுமம்முறை நாட்டினி லில்லையேற்
சூழுமச சொல்வழக்குஞ் சுலவுமே?

293. பானை சோற்றினுக் கோர்பதம் பார்ப்பது
மானயானும் வழங்கின னன்பதே
ரீனமற்ற வொழுங்கை யியைத்திடன்
மானவர்க்குண மருவிய சால்பதே.

294 இன்ன செய்கையறிய வியலாதே
மன்னுகின்ற வழக்கிற் கடிமையாச
சின்னமுற்ற வான்றிச சிலர்வழக்
கென்ன காணதைப் போற்றலு மேனென்பார்.

295. முன்னர் நின்ற முதுக்குறை வில்லை-
மன்னிநின்ற வுலக மதிப்பதின்
றன்ன தன்மையினார்ந்த பிறழ்வுணர்
வுன்னினோரை யுமுள்ளங் கொளாதன்றே.

296. செப்பம் வாய்ந்து சிறந்த பெரியவ
ரொப்ப நின்றதுலக மெனப்படுங்

தப்பிலன்ன வர் ரன்மையை யுத்தியி
னெப்பில் கேள்வியநுபவத் தோர்கவே.

## 10 கவிகள் அநுமிதியியல்

## Deduction.

297. ஓர் பொருளை நிறுத்துதன் முன்னர்நீ
யோர் நிலையை யுளந்துறல் வேண்டுமா
லோர்முறை யுளுருது நிலைகெடிற்
சார்பகருமவ் வா ந்தவறுமே

298 பலபொருட் குண கண்டு பகுத்தபின்
சில முரணின் விலக்கிற் செறிப்பரா
லிலகவோர் விதியிட்டிய பின்னர்
தலகில் பன்முடிவாற்றல் நவமே.

299. பகுத்தறிவு மனிதன் பாலதா
முகக்கவோர் மகன் சாத்த னென்பானெனிற்
பகுத்தறிவுளன் சாத்த னெனப்பகர்ந்
திருக்க கேள்வியியையின் முடிப்பரே.

300. பறந்து செல்வபறவை யென்றார் நரி
பறந்து செல்லுமப் பான்மை யிலாது நாற்
பறவையன்று நரியெனும் பான்மை போற்
சிறந்த ஞாயந் தெரிப்பதுஞ் சால்பரே.

301. ராமன் கொற்றனின் மூத்தவன் ராமனுஞ்
சாமனைக் கொருதம் பியெனிற் கொற்றன்
சாமன் றன்னி னிளையனெனச் சொல
லோமென் றியாருமுவக்கு நியாயமே.

302. 'தன்னறிவி னெழுகினுந் தாழ்க்கலார்
சின்ன மெண்ணுவர் செப்பும் பிறர் மொழி
யன்ன வாற்றினு மவ்வகை மாற்றமே
துன்னிநிற்கு மித்தொல்லுல கத்தினே;

303. 'தன்னறிவு பிறர் மதிதாங்கிய
நன்னர்ஞான மிடண்டினி லொன்றையே

மன்னியாற்றல் வழக்கெனி னெம்முறை
துன்னிநிற் கினுந்தோமுறு வார்களே.'

304. என்று வாதமியம் பியிழுக்குத
றுன்றிநின்ற நிலைதுடைத்த கேய்ந்ததான்
மன்றவின்ன வெலாமநு மானத்துட்
டுன்ற விட்டுத்தலக்குவர்நம்மவர்.

305. கற்ற கல்வி கசடறத் தேர்ந்தபி
னுற்றஞான முதவாவிடிற் பெற்ற
நற்பொருள்கணலிவதன்றி யற்ப
முற்றுத் தாழ்வ ருலகிலறிஞரே.

306. நம்மனோர்க ணவிலுந் தண்டாபூப
மம்மைசாற்று மசுமலோட்டத் தொடு
செம்மையிற் செறிகாக தாலீயமென்
றிம்மை வாய்பாடியையான வெண்ணில.

Theology.

307. இவைதவிர்த்து மதியெக் கழுக்கத்தா
லவையிற் பற்பல நீதிவாதத்தினெ
லிவையளித் தருளீசனைக் காணுவேஞ்
சுவைபெற வெனச் சொல்லுதல் பேதைமை.

308. அவையெலாஞ் சொலவிவ் விடத்தன்று சால்
புவமையற்ற கலைகளை யூட்டுமிந்
நவைநலித்த கழகத் தினிப்பநிநா
மிவணியைந்த பிறவினை நோக்குவாம்.

---

## IV. புறனடையுரைத்த வத்தியாயம்

# On Technical Education.

309. பொதுச சிறப்பெனப் போற்று மிருவகைக்
கொதிப்பில் கல்வியிற் கூறும் பொதுவினைக்
கதித்துரைத் தனனன்னவை கற்றபின்
மதிச்சிறப் பினையூட்டி மலிவித்து,

310. வித்தமீயுஞ் சிறப்பொடு மேன்மை வாய்ந்
தொத்த கல்வியையுன்னி யனைவருஞ்
சித்தமாக்குவர் செப்பிடிற் கூத்தனு
நித்தமாடுவனீண்ட வம்பிற்றிற்கே.

311. உண்ணல் சீவனெளிர்வதற் கென்னல் போற்
றிண்ணமான விக்கல்வித்திற முறின்
வண்ணமாக வயிறு நிறைந்திடு
மெண்ணினென்றிதே சுட்டென வேலைழமை.

3 கவிகள் சிற்பகல்லூரியைப் பற்றியன.

The Engineering College.

312. இவணறியு மிதுசிற்ப கூடமாங்
கவனமாகவோர் கட்டடங் கட்டுதற்
கிவளவு பொருளென்ன வியம்பிப்பி
னவளவிற் படந்தானு மமைப்பபே.

313. எட்டுக்கல்வியி னேற்றிய நன்முறை
யோட்டமுற்று மிகுண்மைப் படுப்பரால்
வாட்டமற்ற வகையிற் கல்விகொண்
டீட்டுதற்கேத் தெண்ணில செய்துமே.

வேறு

314. சென்னைமுற் பலவூர்சிறந்த கட்டடமுஞ்
செப்பருங் காவிரிமுதலாப்
பன்னியாறிக்கணைகளு மாற்றின்
பாலமு மணிபெறவகுத்துத்
துன்னவிட் டியர்ந்தகலிங்குகள் கடலுட்
டோன்று வாயாவதி கூண்டு
மின்னலக் காலேயிலாத சோபான
முதலிய வியைத்த நித்தலமே.

2 கவிகள் வைத்திய கல்லூரியைக் கூறுவன.

The Medical College.

315. இன்னதினீங்கி யாண்டு சென்றணயி
னியைந்தநோய் நீக்குதற்கான
நன்னயமருந்து நோயறிமுறையு
நவின்று நற்கருவி கையாடத்

துன்னியமனமுந் துற்றகைத்திடமுந்
தோற்றவ ரவரிடத்தணைந்து
மன்னியம் முறையை மதித்துணர்ந் தோங்கும்
வாகடர் தொகையடங்காதே.

**316.** பட்டணந்தோறும் பரவிநன் மருந்து
பாத்திடுஞ்சாலைய ளிவர்க
ளொட்டிநாட் டுள்ளோர் காம் பெறுநோயை
யோட்டுவா ரன்றியுமிவருட்
டட்டறச்சான்ற சத்திர வகையிற்
சற்குண மடைந்த பேர்பலரான்
முட்டறச் சுகக்கடியம்மை பெருநோய் மூரிநோய்ச்
சாலையுஞ் சிலவே.

## 7 கவிகள் சட்டகல்லூரி முதலியன.

## The Law College, Arts School, Commercial & Industrial Schools.

**317.** யாண்டுறு மாடநாட் டியல்பநனை
யியக்குநற் சட்டமதாட்ட
வீண்டிய கழகமதற்குளே கற்ற
வெழிலவர் நீதியைவழங்கு
மாண்டெலா மடைந்து வெட்டியகலையை
யன்றிது திருகிய தலையென்
றீண்டியகல்வி வலிமையி னவினியை நலத்தினிற்
றெழித் தொளிர்வார்.

**318.** பசுவுணர் வொடுங்கிப் பதியுணர்வெழுந்து
பளகறு நமக்கெலா மிவர்மாட்
டிசைவுறு மவதியில்லையா லிங்ங
னெழிலுறுஞ் சித்திரசாலை
நசையறச் சென்று நோக்குவோ நண்ப
நவிலுமுக் கலையி னிஃதொன்று
லிசைவுறப் பதுமை சித்திரநகாசு
மியைத்தனர் மரத்துலோகத்தே.

**319.** தந்தத்தா லான பணிகளுமீண்டு
தயங்குவ நோக்குக
சந்தமாப்பல கைத்தொழில்களை யாற்றுஞ்
சாலைக ளறிகுவமவற்றுட்

சந்தகம் பருத்தி பட்டுநூற்றுணி சீர்ச்சண
 லுடைச்சாலை தேக்காப்பி
நந்நாறு மெழுகுவார்த்தி கூட்டிடமு நயத்திருப்
 புலைகளுந் தேராய்.

320. விரவிய வான்றோர் பிரசங்கம் விரைவின்
 விளக்குறுஞ் சுருங்கிய லெழுத்துந்
தரையினினச்சு மவையிலா ரடிக்கும் கருவியுந்
 தந்தியுங் கூட்டி
நிரைநிரை கணக்கு நிறுத்திடத்தினமு நிலவிய
 வேட்டுடன் பதிவு
முறைவகுக் தாட்டிச்சீட்டுக ளனுப்பு முறையையு
 முரைப்ப ரிவ்விடத்தே.

வேறு.

321. ஆங்கிலம் ஜப்பான் முதலிய விடங்களை யடைந்தே
யோங்கு கைத்தொழி லைமுற வுணர்ந்துவந் திந்நாட்
டோங்கவிட்ட கண்ணடி சுவுக்காரமு முதவுந்
தீங்கில் சாலைகள் சிறப்பினிற் செறிவன நோக்காய்.

322. எழுதுமுள்ளொடு காகிதமிவை முனைவியன்ற
பழுதிலாப்பொரு ளளித்திடப் பரவியசாலை
யுழுகருவி கூடாரமுந் தோலினு லுருற்றுங்
கெழுதகைய சாமான்கெழு மறைகளும் கேளாய்.

323. இன்னகைத்தொழிற்சாலையுள் வேதன மிறுத்து
மன்னிநின்ற மாணவர் பலபரிட்சையிற் றேறிப்
பின்னர்வேதனம் பெற்றுநாட் டியந்திரசாலை
துன்னவைத்து நாடொளிருவான் றொடங்குவர் தொழிலே.

## 7 கவிகள் பயிர்முறை யுணர்த்துஞ் சாலையைப் பற்றியன

## The Agricultural College.

324. நாட்டுப் பண்ணையர் பயிர்முறை நவையினதென்று
காட்டிநன் னெறிக்கலப்பைகள் புதுக்கி வித்திறைக்குந்
தாட்டிகத்தினைக் கருவிகொண் டமைத்தெருவட்டக்
கோட்ட மில்வகை மண்ணினைச் சோதித்துக்கூறி,

325. காலமும் மவற்றியலு மக்காலத்து விளைவுங்
கோலமாய்ப் புகட்டக் குடியானவ ழைத்துச்
சாலவோதுவா நுபவத்தவை நிகழுவதைத்
தாலத்தவர் பயிராக்கியுந் தருகுவர் நண்ப.

326. என்னசெய்யினு மேழைநந் நாட்டவற்றை
நன்னயத் தகத்துட் கொளார் நாள்கழித் தொழிப்பர்
பன்னியோதலெ னாசரும் பகருவர் கடனைப்
பின்ன ரீவதற்கிவர் செயைப் பிறக்குவரன்றே.

327. தேகத்தைத் தொழின்முயக்கிடிற் றேய்வுறுமென்று
காகமென்ன நந்தெருக் கொறுமலைந்து காகளாக
ளோகையிற் பலசருக ளொருதுகளுடன்கொண்
டைகைநோக்கி யூர்திரிகின்ற யாசகர் தொகையை.

328. பண்ணையாளர் முற்பனவராய்ப் பிறந்தவரீரு
யெண்ணலாகுமோ வின்னவர் நாட்டினை யொழியத்
திண்ணமாச நன்முயற்சிகள் செறிவதெப்பொழுதோ
வண்ணமாக விவ்வையத்தி னறிகில மன்ப.

329. பசுவின் போர்வையைப் போர்த்துப் பின்பல புலித்தொழிலைக்
கசிவின்றுற்றுறு கண்ணியர் தவப்பலருளரிா
இசையிலா துயிர்வளர்த்தலிற் புகழொடு மிசைந்து
நசிவுறுஞ் சிலநாட்களின் வாழ்க்கையே நலமால்.

330. இன்ன கேடெலா மெடுத்து நாவறண்டிட வியம்பி
மன்னி நிற்றிடலெற்றுக்கா மதிக்கரு மிதுவிட்
டுன்னிக் கண்முன ரொளிருமக் காட்டுக்கல்லூரி
தன்னிற் பேசுடுந்தரஞ் சிறிதறைகுவெ னெலுவ.

## 5 கவிகள் காட்டுக் காட்சிசாலை வருணனை.

## The Forest Museum.

வேறு.

331. கல்லூரிக்குண் ணுழைவதன் முன்னர்க் காண்கிற்பாம்
பல்லூரிற் றிகழ்பாதப முற்றும் பாத்துப்பின்
சொல்லூறப் பலதுண்டுகளாக வாளிட்டு
நல்லேராக வமைத்தனர் வைத்தார் நமர்காண.

332. தூரத்தே சுவர்தோற்றுவ காட்டிற் றேய்ந்துள்ள
சாரத்தேவளர் தழைசிறை பெட்டக மிப்பக்க
லாரத்தொருக செவ்வணல் முன்றுமிருகத்தி
னீரத்தே பதமாக்கியதோலா மிவைமுற்றும்.

333. ஆனைமலைக் கொடுமுடிமே னின்றும் மழகாகத்
தானையெலா மடிவாடத் தீர்க்கத் தோட்கொணடு
வானத்தாரி யிபங்கிய கம்பி வழிக்கண்டார்
தானத்தே யதனைசுமையங்குவ தறிவாயே

334. மற்றும் பற்பல பூச்சிகளை மொட்டின்மருவுவ
சுற்றுங்கண்ணாடி சூழ்ந்திடுபேழை சூழ்கிற்பாய்
தற்றெறி வேழந்தாழுங் குப்பையைத் தட்டியொடு
முற்றறி, கானததோங்கும் பொருள்களோர்கவே.

335. தானிய வகையுங் கூலத்துள்ளாம் பயறுகளு
மேனிலையாக மிளிர்த்திக கடுகந்திரிபலையு
மேனைத் தேனுமிருலு மியைதகா ரிவையெல்லா
மூனசசொல்லா னுனுமுறைகக வொண்ணுமே?

### 6 கவிகள் தாவரத் தோட்ட வருணனை.

### The Botanical Gardens.

336. சொல்லமை வில்லாப் பற்பல சிருந்தோய்ந்துள்ள
கல்வலிம் மாடம்தாண்டிடி னுண்டுநடைபாதை
துல்லியமாகத் தோன்றுந் தாவரநூல் வல்லோர்
மல்லுறவார்க்குந் தோட்டப் பயிரை மதியாயே.

337. நாற்றுகள் விட்டபாத்திகள் கூடைநற்சட்டி
வீற்றுவரிக்கண் மிளிருவகாணாய் வேண்டும்போ
தாற்றி யகற்றியு மீட்டுமமைக்க வாங்கொட்டி
யேற்றின ரன்பினின்ன வொழுங்கை யெதிர்பாராய்.

338. ஒவ்வோர் புதலுக்கொவ்வோர் நாமமுண்டென்று
செவ்வே நாமுந்தேர்ந்திட வாங்கே சீர்செய்து
வெவ்வேறாகப் பேர்கள் பொறித்த வியன்சட்ட
மெவ்வே தீரநிற்பன வோதி யெழில்காணாய்

339. பன்னாட்டுள்ள பாதபமுற்றும் பாட்டாளர்
மன்னாகிற்பக் காட்டினர் மாண்பினிச்சோலை
துன்னாநின்று பேதந்தோற்றுந் தருயாவு
மெந்நாட்டுந் நாமோர் சார்க்காண லெளிதன்றே.

## Glass Houses.

## கண்ணாடி வீடுகள்

340. சிற்சில் செடிகால் வெப்பந் தம்மின் பேகத்தான்
முற்படமாரா வாதலின் முற்றுங் கண்ணாடி
யெற்படுமாறுங் காற்றுங் குளிருமேறாதுஞ்
சொற்படவைத்த வீடுகடோய்ந்து தேறுயே.

## Hot Houses.

## சூட்டறைகள்

341. முற்றுஞ் சுவரான்மூடித் தாளிட்டுட் சூடு
முற்றக் கண்ணாடியி னுண்மேற் றட்டோடிட்டுச்
சுற்றக்கீழே தீயிட்டெரிகான் மாட்டிப்பின்
னொற்றுப் பாத்தி நேர்வனவெல்லாம் விளைவிப்பார்.

## 27 கவிகள் காட்டுக் கல்லூரியைப் பற்றியன

## The Forest College.

## சத்திரமுறை

## The Laboratory System.

## வேறு.

342. இத்தலத்தை நீங்கியவண் சேருறிலிப்பண்பையெலா
மேட்டிலுட்டிக்
கைத்தலநெல்லிக் கனியிற் கருவியினாற் கூறாக்கிக்
காட்டாநிற்ப
ரொத்ததனை யுணர்வதன்மு னுடல்கிறு மனமையத்தே
யுள்ளந்தோன்றுங்
கைத்த நிலைதனை மதித்து மாணவரை மனந்தேற்றக்
கருத்துக்கொள்வார்.

343. தற்கால நடைகொண்டு முற்கால வியல்பதனைச்
சாதித்துச்சொல்
கற்காத மொழிச்சிலவை ராரிடத்துப் பிராணிகளைக்
கண்டஞ்செய்யா
தெற்காமு திருடிகளுங் கூறினர் பலநுணக்க
மியையவென்ற
சொற் காதலிப்பவர் கோக்கின னென்றவிருந்து பொருட்
சொல் லோராரே.

344. கொல்லாமை நல்லறமே யாயினு மிவ்வுலகமதிற்
கூடுஞ் சீவ
வல்லாண்மைக் கூறுகளை யுணர்ந்தறியு மேன்மைசெறி
வழிக்கணிற் போர்
பொல்லாத பிராணிகளைக் கீணிலையிற் பொருந்தியுள
பூச்சி பூண்டை
யல்லாத பேருயிரை யுணவுக்காம் பலபொருளை
யறுத்தல்சீரே.

345. பொதுநன்மைக் கொருகுடிதன் பொலிவழித னியாயமெனப்
புகல்வ ரான்றோர்;
ரிதுமெய்யின் கூறெனயாருந் தேறி யறிவோங்க
வியற்றுஞ் செய்கை
சதிகொலை முற்பாதகத்தி னீட்டமதிற் சாராதாற்
சத்திரஞ் செய்
ததிவேதைப் புண்ணுளரங்கமதை வயித்தியரு
மாற்ற லோர்வாம்.

346. கத்திரியுமோர் பொருளைப்பன் மடங்கு பெரிதாக்குங்
காந்தக் கல்லு
முத்தம சீவாணுவதனு யிரிழவாதோங்கும்வகை
யுறைவதற் கென்
றொத்தசூட்டறை பீங்கான் கண்ணுடிப் பாத்திரங்க
ளுயர்ந்த மேசை
யெத்தனையும் பிசகாது நிறைகாட்டுந் தராசோடு
மியைவ நோக்காய்.

347. நாங்காணு மிக்கூடஞ் சங்கமத்தா முயிர்நூலை
நன்றே சாற்ற
வோங்கியுள தாயினுஞ் சில்லுபகரணந் தாவரத்தைச்
சீரிதேதத்

தேங்கியவாஞ் செடியுறுப்பைப் பகுத்தபினர்க் கண்காணுச்
சிறியவொன்றை
யீங்கியலுங் கண்ணுடி யயுதமடாங கதிபெரிதா
யியைக்கு மன்றே.

**348.** தாவரநூல் பிராணிநூ லோர்கலையின் பகுப்பென்பர்
சான்ற வீது
சீவனுளிர் சராசரத்தைச் சாற்றுவதாஞ்; சிலசெடிகள்
சீவனோடு
மேவியபூச்சியையன்றிப் பேருயிரு மகப்படுத்தி
விழுங்கு மென்ப
தாவருமப் பண்பினைநீ பெரியார் வாய்க்கேட் டுணர்தல்
சாலநன்றே.

**349.** சருவியொரு நிலைநின்றுந் தக்கவுயிரோங்கி வளர்
தாவரத்தை
யொருவகையுட் சேர்த்தன் முடி யாதெனநீ யுணர்கவவை
யொழுங்கின் மூன்று
பருவிதத்தி னடங்குபவை யென்பர்சில ரவைபெருக்கும்
பான்மை காட்டக்
குருவடியை வணங்கி யெனதான மொழி கொண்டுரைப்பேன்
கொள்கவன்றே

## Plant Physiology: Seeds & Germination.

## விதையும் முளையும்

**350.** வித்துமுளை மரமுன்னே வென்று பலராசங்கை
விளைத்து வாய்ந்த
சித்தமுறு முறையெல்லாம் வாதாடி நாள் கழிப்பர்
சிலன்ன
உத்தமர்தஞ் சேர்க்கை யொழித் தொருவிதைதற் சாதிமர
வுருவை யென்றுஞ்
சிற்றடக்கத் துணவோடு மமைத்துக் காப்புத்தோலுஞ்
சேர்ப்ப தோர்க.

**351.** விதைகளையா மொன்றிரண்டு பல்பருப்பு முள்ளவென
விதம்பிரித்துத்
துதைவு றநீரூற்றிடி லப்பருப்பிலுளசாரம்
பக்குவத்திற் றோய

விதைபோல மிசவூறித் தோல்வெடிக்க முன்னின்ற
முளையு மெய்தித்
தலைவுறப் பூமிக்குள்ளே நுழைந்து பயிருணவு கொளுந்
தன்மை வாய்க்க.

இலைபருத்துப் பருப்பினுள சா மெலா முண்டுபிற
கெழிலின் மேல்வந்
துலகினைச சூழ்ந்திலகுறு மாகாயத்துக் கரியமில
முண்டு வீங்கிக்
களகளவென் றோங்குவதுமன்றி வேருள் ளிழுக்குங்
காசில் சாரத்
திலகுறத் தண்டோங்கி மரநிலைத்தற்கா மாணிவே
ரியைகு மன்றே.

## The root

## வேர்

**353.** வேரினது பகுப்பினை யாங்கண்டறியி னுண்டாகும்
வியப்பு மென்னே
யேரினோர் சிவாணுவுறை பையுமஃதுணவை
யேற்கச சுத்த
நீரினமை மட்சாரம் வடிக்கட்டி யீவதற்கு
நேர்ந்த தோலும்
பாரிலுள சாரமதிற் செடிக்கான பொருள் பிரிக்கப்
பரந்த தட்டும்,

**354.** இவைமுதலாப் பலவுள விஃதன்றி மரத்தாணிவே
ரியைந்த சல்லி
நவையறவச் செடிவீழா தழகாக நாற்புறத்து
நடக்குங் கம்பி
சுவைபெற வேனிற்காலத் துணவுகொள வென்றமைக்குந்
துய்ய கந்த
மவனிதனிற் பழுமரத்துங் கொடிகளிலும் வீழ்வேரு
மாகுமென்ப.

## The Stem & the bark.

### பிரகாண்டமும் பட்டையும்.

355. வேர்வீழ்ந்த பின்னர் நடுத்தண்டோங்குமது கவைகள் விட்டு மேலு
நார்த்தன்மையுற்று வலுத்தகன்ற பலதழைத்தலையை நன்று தாங்க
வேர்கொண்டு தடிக்குமதன் வளர்ச்சிக்காஞ் சாரஞ்செ லிருங்குழாயைச்
சீர்வாய்ந்த பட்டை காக்கும் வயிரம் முதற்கண்ணே செப்பிற் சோறே.

356. சோறுகியது நீங்கிவயிரமாய் வளருமதைச் சூழ்ந்து வேறு
வேறுகி மிளிருணவு காற்றுச் சென்மாரநாளம் விழைவி னோங்குங்
கூறுகத் தறித்தமர வட்டமதிற் குறுக்குநெடுக் கூடுங் கோடு
மாறாத விதமாகப் பாதபத்தி னுண்டறிய வாய்ந்தவாமே.

357. மரம்பலவு முள்வயிர மேறுவன புல்லினத்து மரங்களாக
மருவுபனை தென்னை கழைகமு கிந்து வெளிப்புறத்து வயிரஞ் சாருந்
தருவினதுகுணம் வளர்ச்சி யொத்தமுறைப் பட்டைவேர் சருவி நிற்கு
முருபெறக் கோழுனை பொறியானை முள்ளானை முதலா வோங்கும் பட்டை.

## Leaves & Respiration.

### இலைகளும் மரச்சுவாசமும்

358. தண்டுகவை யோரமைப்பா மேற்செல்லி னிலைகொழுந்து சார்ந்து வேர்க்க
ணுண்ட பயிருணவுமர நாளத்தூடேற்ற தற்குக் காற்றை யூட்டக்

கொண்டபல துவாரத்தோ டியைந்துசிறு நரம்போடிக்
கொள்ளுங்காற்றை
யுண்டபின னுயிர்வாயு வெளிவிட்டுக் கரிகால்கொண்
டோகுமன்றே.

359. பகலெல்லாங் கரிவாயுபருகி யிரவதனைவெளிப்
பாற்றிசைவ
னகவுறுநல் வாயுவினை மாமுண்ணு மாதலினு
மிலான்றோ ரென்று
மிகத்துமர வடிநிழலிலிரவு துயிலாகாதென்
றிடித்துரைப்ப
ருகக்கமரமக்களுக கென்றிய லுதவி முக்காலு
முணைக்கொளுமே.

360. ஓரிலையினுட் புழைகள் கணக்கமையா வன்னவற்று
ளோங்குஞ்சாரஞ்
சார்புழையு ணிறைந்தகடு சருவுவன பல்லறையுந்
தக்களுப
வேளிக்கும் பனைரம்பும் வெயின்மழைகாக்
கின்றசுணையியைபுமன்றித்
தாரணியின மரத்தோடு பொருந்துறுங் காம்புந்
நாளஞ் சார்ந்ததாமே.

361. ஓரிலையே கவட்டிலை முக்கவட்டிலைப்பல்க வட்டிலையோ
டோலையீர்க்கி
னேரிருசார் நிறைவுறுமாரிலைபோலப் பத்திகளு
நேரு மின்ன
வேரதனைக் கணித்தறிக. விலைமேலோர் பளபளப்பங்
கிருத்தலேனைக்க.
பாரதனிற் குளிர்காலத் திரட்டையிலை குவிந்திருக்கப்
பார்ப்போ மன்றே.

362. மக்களுண விரத்தமா யுடன்முழுதும் பரவுதலின்
மரத்துச்செல்லுந்
தக்கவுணவதனை வேர் மண்ணின்று மோயாது
தாங்கித்தள்ள
மிக்ககதியுடனே யவ்வுணவீரத்தோ டிலைகாறேடி
வெய்யி
லுக்கிரத்தி னுறிக்காற்றுண்டு மீண்டோடிக் கீழுவந்து
செல்லும்.

363. இம்முறையே பன்முறை மாறோடிப் புல்செடி வளர்க்கு
மென்பமேலோர்
மெய்ம்முறை யிஃதாயினுங் காலப்பண்பாற் பூச்சிபுழு
விட்டினமாந்தர்
செய்ம்முறையாற் சீவாணு செறிந்துள்ள நடுநாளுஞ்
சிதையினோங்கு
மம்முறையின் மாறியுயி ரணுச்செத்துச் செடிவாடி
யணையுமீண்டே.

## Flowers & Reproduction.

### பூவும், விளைவும்.

364. தாவரத்தி னுவப்பிணைத்தந் துணர்வினுக் கோரின்பமதை
யூட்டும்பான்மை
மேவுறுபூ வமைந்துள்ள வவயவத்தைத் தனித்தனியே
வியப்பநோக்கி
னோவறுமத் தாவரங்கள் பல்குமுறை வெளியாகு
மோரோர் பூண்டு
பாவுசிறு முளைக்கண்கள் கொள்ளு மவையறுத்துமண்
பதியன்வைப்பார்.

365. மையமுள விதைப்புட்டில் சுற்றுங் கேசரத்தண்டு
மலிந்துசூழ
வையமதி னிதழ்கொண்டுதற் காக்கப்புறவிதழு
மலரைக்காக்கு
மையமறக் காம்புமலர்செடி நிறுத்துமப்பூவு
ளார்ந்த தேனை
யையபொறித் தேனீசார்ந் தெடுத்தோடிக் கூடதனி
லமைக்குமன்றே.

366. வண்ணாத்தி தேனீக்கண் மரஞ்செடிகட் காற்றுதவி
மதிக்கொணாதே
னுண்ணாநன் னிறம்வாய்ந்த மலர்க்கணுள பராகமதை
யுடலிற்கொண்டு
கண்ணாரமற்று மொருகாய்ப்பில்லா மரத்திடத்துக்
கருதாதீயு
மெண்ணார விவ்வகையிற் பூச்சிகளு மரங்காய்க்க
வியைப்பவாமே.

367. விதைப்புட்டின் முந்திறத் தென்றுன்றோர் களறைந்தனராம்
மேன்மை சொல்கேன்
றுணைதவுறு கேசமப்போ கைக்கப்போதுறைராது
துளைக்குட் சேர்த்தே
யுதவுறவித் தாக்குவ கொன்றுயர் புட்டில்வா யெட்டா
துறையுந் தணடி
னிதந்தேடித் தேனுண்ணும் பூசிகளானியமிக்க
நேர்வ தொன்றே.

368. மாதுளைபோற் புட்டில் வெளித்தோன்றுவது மூன்றாகும்
வகையா முன்ன
ரோதியநன் முறைக்கவளை மலமோடு பூவசு
மணையு நேர் நேர்
தீதறு கேசரக்குழாய்ப் புட்டில் காயாமவளை
செப்பு மோர்பைக்
கோதறு காப்பிசசெடி பேராமணக்கு வெண்டியெனக்
கொள்ளும் பைகள்.

369. செப்பரிதாஞ்; சிலவித்துக் கொட்டையெனச் சதைந்
மேவிச சிறந்ததோலு
மொப்புறுவ; பாகத் தணடுள்ளிதழற் கொள்ளரளி
யோர் கிண்ணத்தைத
தப்பறவே யொக்கும்; பன்மூலிகையின் பெயர்
குணமுஞ் சாற்றுதற்கு
மிப்பெரிய கல்லூரி நீங்கியவ ஞெளிர் வடசொ
லியலவைத் தேர்வாம்.

## 4 கவிகள் வடமொழிப் பாடசாலைகளைப் பற்றியன.

## Sanskrit Colleges & Schools.

வேறு.

370. வடமொழி யொன்றே யெல்லாவழக்கியற் பாடைகட்கென்றுந்
தடையறுமுதற் சொலென்று தருக்குவோர் தருக்கமற்று
மடைவுறு மதன்கணுள்ள வருமைமையை யறிந்தேயேனை
நடையரு மதனையோம்பி நன்கு காத்தளிப்பன்றே.

371. உலகினி னடையொழிந்த பாடை மூன்றவற்றிரண்டு
மலர்தலை யுலகின் மேனாட்டுரைகளை மலர்த்திநின்ற;
தலைமைசார் கீழ்நாட்டுள்ள தண்ணியமொழிகட் கெல்லா
மலைவறப் பொருளளித்து வடமொழி மருவிற்றன்றே.

372. அன்னசொல் லோங்கு நாடிந் நாடன்றி யறைதற் கில்லை
நன்னரி னதனைச் செல்வர் போற்றுவர் நவையொழித்த
வின்னல வேதசாலை யூரெங்கு மிருப்பவற்றைச்
சொன்னலத் துறைத்தனத்தார் துகளறமேற் பார்ப்பாரே.

ஷை வேறு.

373. வேதமூறு மரணியகங் காடகமுஞ் சந்தைசொலி விழைந்துபூர்வ
வேதமறு கிரியைகளுங் காப்பிய நாடகவணியு மிலக்கணத்தோ
டோதுறுதர்க்கங் கணிதம்பீஜ கணிதந்திரி கோணமிதியோதித்
தீதறு சூத்திரமாகாங் கிசைமுறையிற் சாற்றுவாரற் செல்வோ
மாண்டே.

## 5 கவிகள் போதனாமுறைக் கழகத்தைப் பற்றியன

## The Training College

374. நூலுமதை நுவல்வோன்றன் மாட்சியுநா லுவலுதற்கா
நுணுக்கந்தானு
மேலுறவஃதேற்ப வென்றன் குணமுமதைக் கொள்ளுறாநல்
லிசைவுஞ்சேர்த்துத்
சாலவுணர்த்துவரன்றித் தகுமொழுங்கு முறையினையுந்
தழுவிச்சாற்றி
மேலதிகாரிக்காகுங் கணக்கொடு பட்டிப்பதிவும்
விரிப்பாரீண்டே.

375. முன்னையநாட் கல்விபயின்முறைச் சிறப்பைப் பவணந்தி
முன்னோர் சொன்னா
ரென்னினு மிந்நா ளவர்மாட்டறியும் பல்லுபகரண
மென்று மின்று
முன்னிடினுங் குருசீட விசுவாச மிப்பொழுதே
யோங்கக் காண்போம்
பன்னெறிசார் கலைகளையு மாசிரியர் விளையாட்டாப்
பகர்வர் மாதோ.